Registered No. M. 1500.

"NAVASAKTI"

# நவசக்தி

| சந்தா விவரம் | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 | 0 |
| வெளிநாடு—வருடசந்தா | 6 | 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா 7. 0
சில்லரை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரம் செய்யப்படமாட்டாது.

சிலம்பு கo சுக்கிலஹு மாசிமீ கருஉ (26—2—30) புதன்கிழமை பரல் கஅ



## தாயுமானர்

மெய்யான தன்மை விளங்கினல் யார்க்கேனும்
பொய்யான தன்மை பொருந்துமோ—வையாவே
மன்னுநிரா சையின்னம் வந்ததல்ல வுன்னடிமை
யென்னுநிலை யெய்துமா றென்.

அறியாமை மேலிட் டறிவின்றி நிற்குங்
குறியேற் கறிவென்ற கோலம்—வறிதேயா
நீயுணர்த்த நானுணரு நேசந்தா லோவறிவென்
றேயெனக்கோர் நாம்மிட்டு ...

ஏதுக்குச் சும்மா விருமனமே யென்றுனக்குப்
போதித்த வுண்மையெங்கே போகவிட்டாய்— [வாதுக்கு
வந்தெதிர்த்த மல்லரைப்போல் வாதாடி னையேயுன்
புந்தியென்ன போதமென்ன போ.

# ஜோதிஷ - - - - தரங்கிணி

(இதனைக் கற்போர் எவரும் இரண்டு மாதங்களில் பெரும் ஜோதிஷராவர்)

ஆசானின் உதவியின்றி யெவரும் ஜோதிஷ சாஸ்திரத்தை எளிதில் கற்றுத் தெளிந்து பலாபலன்களை நிச்சயித்துக் கூறும் வழிகள் பொதிந்துள்ள ஜோதிஷ சாஸ்திர நூல்கள் பலவற்றுள் காணப்படும் இரகசியங்களின் தன்மையடங்கிய விதிகளைச் செலவமாகச் சிறிதளவிலேயே கற்றுக் கொள்ளுமாறு எழுதப் பெற்றுள்ளது. பலன் சொல்வதற்கு இதனினும் சிறந்த நூல் வேறு ஏதேனு முண்டோ சுவல்பார் இதனை வாசித்துள்ளார். பண்டிதர்கள் பலராலும் மன்னர்களாலும் கொண்டாடப் பெற்றுள்ளது. இதன் விலை ரூ. 1. தபாற் செலவு வேறு.

கிடைக்கும் இடம்:—

எஸ். குருகுஹதாஸப் பிள்ளை,

எட்டயபுரம், திருநெல்வேலி ஜில்லா.

---

## இனம்! இனம்!!

நாவல்கள், சிறுகதைகள், இன்பரகஸ்ய நூல்கள், ஆராய்ச்சி நூல்கள், இன்னும் பல புத்தகங்கள் பிப்ரவரி மாதம் முடிய இனம் கொடுக்கப்படும். விபரத்துக்கு எழுதுக.

ஒற்றுமை ஆபீஸ்,

சைதாப்பேட்டை,

(4) மதராஸ்.

---

ஒரு மணி நேரத்தில் குணம்!

ஆச்சரியமானது!!

## மன்மத ஸ்தம்பன குளிகை

குணம் இல்லையென்று நிரூபிப்பவர்களுக்கு 100 ரூபா இனாமாகக் கொடுக்கப்படும்

இந்த மாத்திரையை டைரக்ஷனில் சொல்லி யிருப்பதுபோல் 10-நாள் சாப்பிட்டு வந்தால் ஆண் சிங்கத்தைப்போன்ற பலமும், ரோஜா புஷ்பம் போன்ற முக தேஜஸும், அழகும், தைரியமும் உண்டாகும். கெட்டுப் போன இரத்தத்தைத் தூய்மை செய்து நல்ல இரத்தம் பரவச் செய்வதில் இதற்கு நிகர் வேறு எதுவுமில்லை. பாலையில் தாய்மூலத்துடன் ஒன்று போட்டுக் கொள்ளவேண்டியது. உத்தரவாதம் செய்கிறோம். உடனே எழுதுங்கள். டப்பி 1-க்கு ரூபா 2. உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

ஸ்ரீ தனம் அண்டு கம்பெனி,

தபால் பெட்டி 119, மதராஸ்

---

உயர்ந்த இலை! குறைந்த விலை!!

## சிவபுரி - - - புகையிலை

உலகு புகழ்வது எது? உற்சாகத்தின் ஊற்று எது? மணம் மிகுந்தது எது? குணம் சிறந்தது எது? சிதம்பரத்திற்கு அடுத்த சிவபுரி புகையிலையே! தேவைக் கெழுதுங்கள்! ஒரு முறை பரீக்ஷித்தால் உண்மை விளங்கும்.

கத்தை ஒன்றுக்கு 40 இலைகள் கொண்டது

| | | | |
|---|---|---|---|
| 1 நெ. | கத்தை விலை | ரூபா | 5-0 |
| 2 நெ. | ,, | ,, | 4-4 |
| 3 நெ. | ,, | ,, | 3-12 |
| 4 நெ. | ,, | ,, | 3-0 |

சிவபுரி "மனோரஞ்சித" வாசனைப் புகையிலை

டப்பி 1-க்கு விலை அணா 0-3-0

1 டஜன் டப்பிகள் விலை ரூ. 1-12-0

வி. பி. தபால் பாக்கிங் சார்ஜ் வேறு.

வி.கே.எஸ். ஐயர் & கோ,

புகையிலை வியாபாரம், சிதம்பரம்.

---

சமையலில் சௌகரியம் வேண்டுமானல் வேறு யோசனையின்றி இன்றைக்கே

## ருக்மணி குக்கர்



அடுக்கைத் தருவியுங்கள். சுகம் நிச்சயமாய்க் கிடைக்கும். 1, 2, 4, 6, 8 பேர்களுக்குரிய ஐந்து அளவுகள் முறையே ரூபா 13, 18, 22, 27, 33-ல் உண்டு. இரயில் கூலி வேறு.

ருக்மணி குக்கர் கம்பெனி,

இராயபுரம் (3) சென்னை.

---

## தேவநாகரலிபியில் மூலத்துடனும் தமிழுரையுடனும் கூடின சோதிட புஸ்தகங்கள்.

1. **பிருஹத்ஜாதகம்**:—இதற்குப் பல வியாக்யானங்களைக் கிணங்கவும் நமது சொந்தமான பல அனுபவங்களுக் கிணங்கவும் சுலபமான தமிழ் நடையில் பதவுரை, கருத்துரை, விசேஷவுரை இவைகளை எழுதித் தேவநாகரலிபியில் மூலத்துடன் வெளியிட்டிருக்கிறோம். புஸ்தகம் டெம்மி 8 பக்க அளவில் சுமார் 750 பக்கங்களுள்ளது. கிலிட்டு எழுத்துடன் உயர்ந்த கலிகோ பைண்டு செய்தது. கிளேஸ் ரூ. 8. ரப் ரூ. 7.

2. **ஜாதக த்வாதசபாவ பலநிர்ணயம்**:—(முதற்பாகம் 1-ம் பாவம் முதல் 5-ம் பாவம் முடிய.) இதில் பாராசரஸம்ஹிதை, ஸாராவளீ, பலதீபிகை, ஸர்வார்த்த சிந்தாமணி, ஜாதக தத்வம் முதலிய கிரந்தங்களில் அதி விஷயமாகக் கூறியுள்ள வசனங்கள் யாவையும் எளிய தமிழ் நடையில் பெயர்த்து வெளியிட்டிருக்கிறோம். கிளேஸ் ரூ. 3-8-0. ரப் ரூ. 3.

ஷை 2-வது பாகம் வெளியாகிவிட்டது. இதில் 6, 7, 8-வது பாவபலன்கள் முன் சொன்னபடி அமைந்திருக்கின்றன. ஸ்திரீ ஜாதக பலன் தனியாய் எழுதப்பட்டிருக்கிறது. புஸ்தகம் டிம்மி 1-க்கு 8-ல் 400 பக்கங்களுள்ளது. விலை கிளேஸ் ரூ. 3-8-0 ஷை ரப் ரூ. 3-0-0.

3. **உடுதசாபல நிர்ணயம்**:—தசை, புக்தி, அந்தரம், சூக்ஷ்மம், பிராணன் வரையுள்ள அதாவது ஒவ்வொரு நாழிகையிலும் நடக்கும் பலனை இதன் மூலம் நீங்கள் நன்கறிந்துகொள்ளக் கூடும். டிம்மி 8 பக்க அளவில் சுமார் 480 பக்கங்களுள்ளது. விலை கிளேஸ். ரூ. 4. ரப் ரூ. 3-8-0.

4. **சகுனபல நிர்ணயம்**:—ஸ்ரீ வராஹமிஹிராசாரியரால் பிருஹத் ஸம்ஹிதை என்ற கிரந்தத்தில் 85-வது அத்தியாயம் முதல் 95-வது அத்தியாயம் முடிய வுள்ள 11 அத்தியாயங்களால் உபதேசிக்கப்பட்ட சகுன பலன்கள் இதில் அடங்கி இருக்கின்றன. கிளேஸ் ரூ. 1-8-0. ரப் ரூ. 1-4-0.

5. **கோசரபல நிர்ணயம்**:—இதில் கோசரபலன் பார்க்கவேண்டிய முறைகள் வெகு தெளிவாகக் கூறப்பட் டிருக்கின்றன. விலை அணா 12.

6. **ஜாதக சந்திரிகை**:—இப்புஸ்தகம் சோதிட சாஸ்திரமாகிற இரும்புப் பெட்டிக்குத் திறவுகோலாகும். ஸ்திரீ புருஷர்களுடைய 10 விதப் பொருத்தம் பார்க்கும் முறைகளு மிதிலடங்கி யிருக்கின்றன. விலை ரூ. 1.

7. **நவக்கிரஹாராதனக் கிரமம்**:—இதில் நவக்கிரஹ பூஜா முறை, நவக்கிரஹ ஸ்தோத்திரம், நவக்கிரஹ கவசம், நவக்கிரஹ அஷ்டோத்தரம், விஷ்ணு கவசம், ஆதித்யஹிருதயம் இவைகள் பாராயணத்திற்கு உபயோகப்படுமாறு தேவநாகரலிபியில் தனியே பிழையின்றி அச்சிடப்பட் டிருக்கின்றன. விலை கிளேஸ் ரூ. 1-4-0. ரப் ரூ. 1.

கடலங்குடி நடேசசாஸ்திரியார், 72, பெரியதெரு, திருவல்லிக்கேணி.

---

# பெண்ணின் பெருமை

அல்லது

## வாழ்க்கைத் துணை

[இரண்டாம் பதிப்பு]

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இயற்றியது

இந்நூல், பெண்மை தாய்மை இறைமை என்னும் முப்பொருளை முதலாக உடையது. இம்மூன்றும் முறையே நூலின் உடல் உள்ளம் உயிராக அமைந்திருக்கின்றன. இம்மூன்று முதலினின்றும் கிளம்பிய கவடுகளும் கோடுகளும் நூலின் பிற உறுப்புக்களென்க.

பெண் பிறவியின் விழுமிய நோக்கம், அன்பால் ஒருவனை மணந்து ஒழுங்குபட்ட இல்லறம் நடாத்துவதில் நிறைவேறுமென்பது நூலின் திரண்ட பொருள். இயற்கை வாழ்வினின்றும் வழுவிச் செயற்கைப்பாழில் விழுவதால் விளையுங் கேடுகள் இந்நூற்கண் விளக்கமாக ஓதப்பட்டிருக்கின்றன. அறம் அன்பு அருள் முதலியவற்றிற்குப் பெண் உறையுள் என்பது இந்நூலில் தெளிவாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. ஒருத்தி ஒருவனுடனும் ஒருவன் ஒருத்தியுடனும் வாழும் உயரிய ஒழுக்க மணம் இந்நூலில் யாண்டுங் கமழ்ந்து கொண்டிருக்கும்.

இயற்கை வாழ்வு, செயற்கைத் தாழ்வு, உடலோம்பல், மலச்சிக்கல், கூடா வொழுக்கத்தால் விளையுங் கேடுகள் போன்ற பொருள்கள் நூலின் ஊடே ஊடே சில விடங்களில் பெய்யப்பட்டிருக்கின்றன. எல்லார்க்கும் பயன்படுமுறையில் நூல் எளிய நடையில் எழுதப்பட் டிருக்கிறது. விலை ரூபா 2.

முருகவேள் புத்தகசாலை,

இராயப்பேட்டை, சென்னை.

---

## நங்கூர மார்க்கு படை மருந்து



தீராத மேகப் படை, கக்குஸ்ப் பத்துகள் நீங்கும். டப்பி 1-க்கு அணா 6. 3 டப்பிக்குக் குறையாமல் ஆர்டர் செய்தால் அனுப்பப்படும். தபால் சார்ஜ் இனாம்.

கோ. ப. நெயினா முகம்மது அண்டு ஸன்ஸ், செயிலா,

Kyaiklat; Burma.

---

## பெட்ரோமாக்ஸ் லைட்



மாண்டில், குளோப், அதன் சாரித்தனி சாமான்கள் எல்லாம் நயமாய் கிடைக்கும்

## பூச்சிவண்டார் கியாஸ் லைட்



உறுதியானது. ரிப்பேர் ஏற்படாதது. நூதன மேக்கர் மதராசில் கிடைக்காது.

முழுவிபர லிஸ்டுக்கு, ஒரு அணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளவும்.

Importers—

...ஸன் கம்பெனி, தஞ்சாவூர்.

---

## வெள்ளி பஸ்பம்

வெள்ளை, வெட்டை, மூலங்கள், எலும்புருக்கி, கிரிழிவு, ஷை சம்பந்த குன்மம் பெரும்பாடு எல்லாந் தீரும். தளர்ந்த தாது வலுக்கும் மற்ற நோய்களுக்கும் மருந்துண்டு. வியாதியின் விபரம் எழுதினால் தக்க பரிகாரம் மருந்துடன் தெரிவிக்கப்பெறும். 5 நாளில் நிச்சயம் குணம் தெரியும். 40 நாள் மருந்து ரூ. 5.

விலாசம்:—

செ. விசுவநாத செட்டியார்,

வைத்யம், லால்குடி, திருச்சி ஜில்லா.

---

## ஜோதிஷம்

ஒரு வருஷம் வரையில் மாசவாரி பலன் எழுத ரூ. 2. ஐந்து வருஷங்களுக்கு ரூ. 7-8-0 வி.பி. செலவு நாலணாவாகும். ஜாதக நகல் அல்லது கடிதம் எழுதும்போதுள்ள நேரம்வதாவதொன்றைக் குறிப்பிட்டனுப்பவும்.

மானேஜர்,

காந்தி ஜோதிஷ நிலையம்,

திருத்தணி, S. இந்தியா.

---

மூளைக்கு முன் பலம் கொடுப்பது ஸ்னனமே

## குகைசந்தனாதித்தைலம்

உங்கள் மூளையிலுள்ள உஷ்ணத்தை நீக்கி ஞாபக சக்தியை அதிகரிக்கச் செய்யும்; கண் மங்கல் நீங்கி குளிர்ந்த பார்வை ஏற்படும். நல்ல நித்திரை யுண்டாக்கும். பசி தீபன மேற்படும். மயிர் உதிர்தல் நின்று மயிர் முளையும். மலை மூலிகைகளின் சத்தால் தயார் செய்யப்பட்டது. மெலிந்த உங்கள் தேகத்தை ரக்ஷிப்பது ஸ்னனமே.

10 அவுன்ஸ் புட்டி ரூ. 2

6 அவுன்ஸ் புட்டி ரூ. 1

கே. எஸ். மணியம்,

சூளை, வேப்பேரி போஸ்டு.

---

## ரோல்டு கோல்டு ப்ளேட் 1930-ம் வருஷ புதுமாடல் கைக்கெடியாரங்கள்




இதிற்கண்ட எந்த ஷேப் வேண்டுமானாலும் அனுப்பப்படும். வேலைப்பாடு மிகவும் உறுதி. கையில் கட்டிக்கொண்டால் தங்க ஆபரணம்போல் இருக்கும். ஒவ்வொரு கடியாரத்திற்கும் ரோல்டு கோல்டு ப்ளேட் கைச்சங்கிலி இனாமாய்ச் சேர்த்து அனுப்பப்படும். 5 வருஷம் உத்திரவாதம். ரூ. 4 15-0.

வி. பி. செலவு வேறு.

ஜினன் வாட்சு கம்பெனி,

மிண்டு பில்டிங்ஸ், மதராஸ்.

வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு க௦ சுக்கிலஹு மாசிமீ கருவ (26—2—30) புதன்கிழமை பரல் கஅ

## இந்திய வியாபாரக் கப்பற்படை

—

['மீகாமன்']

பிறநாடுகளுடன் நமது நாடுசெய்யும் வியாபாரத்தின் விலை மதிப்பு சுமார் 600 கோடி ரூபாயாகும். இவ்வளவும் அந்நியர்கள் கைக்குள் சிக்கியிருக்கிறது. ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் அந்நியர்களுடைய கப்பல்களால் நடத்தப் படுகின்றன. பெரும்பாலும் ஆங்கிலேயக் கப்பல்களே இவ்வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கின்றன. மிகுதியான லாபம் அவர்களுக்கே கிடைத்து வருகிறது.

* * *

18-ம் நூற்றாண்டின் முடிவுவரை இந்திய வியாபாரம் இந்தியக் கப்பல்களால், இந்தியர்களால் நடத்தப்பட்டு வந்தது. நமதுகப்பல்களே உலகத்தில் சிறந்தனவாகக் கருதப்பட்டன. நமது மாலுமிகளே கடல்களைத் தாண்டுவதில் வல்லவர்களாக மதிக்கப்பட்டார்கள். சோழ அரசர்கள் 10, 11-ம் நூற்றாண்டுகளில் கப்பற் படைகளை வைத்துக் கடல்கடந்து பல தீவுகளையும், பர்மாவையும் பிடித்து ஆண்டு வந்தார்கள். அதற்கு முன்னால் மணிமேகலை, சிலப்பதிகாரம் முதலிய சிறந்த காவியங்கள் எழுதப்பட்ட நாட்களில் நமது கலங்கள் எல்லாத் துறைகளிலும் காணப்பட்டன. நமது வாணிபர் திரைகடலோடியுந் திரவியந்தேடி நம் நாட்டின் செல்வத்தை வளர்த்தனர். இப்போது நாம் விழுந்துள்ள இழிநிலையை நோக்குங்கள்! கடலில் போவது என்றால் பயம்! கடலைக் கடந்து சென்றவர் திரும்பினால், ஜாதி மாறிவிடுமாம், பிராயச் சித்தம் செய்ய வேண்டுமாம்! கோயில்களுக்குள் செல்லக் கூடாதாம்! என்னே நாம் கப்பல் பிரயாணங்களுக்குக் கொடுக்கும் ஆதரவு! நல்ல வேளையாகக் காலம் மாறி வருகிறது.

* * *

சென்ற நூற்றாண்டில் நமது பாய்மரக்கப்பல்களுடைய சிறப்பைக்கண்ட லார்ட் வெல்லெஸ்லி என்ற கவர்னர் ஜெனரல் இந்திய வியாபாரக் கப்பல் படை ஒன்றைத் தயார்செய்ய வேண்டுவதற்குக் கிழக்கு இந்தியா கம்பெனித் தலைவர்களிடம் அநுமதி கேட்டுக் கொண்டார். ஆனால் அவர்கள் அநுமதி கொடுக்க மறுத்து விட்டார்கள். பாய்மரக் கப்பல்களுடைய காலம் போய் நீராவிக் கப்பல்கள் வந்தவுடன் ஆங்கிலேயர்களுடைய வியாபாரக் கப்பற்படை பெருகியது. நமது கப்பல்கள் நாளடைவில் மறைந்தன. இந்திய வியாபாரம் எல்லாம் அந்நியர்கைக்குள் சிக்கிக்கொண்டன. அந்நியக் கப்பல்கள் நமது வியாபாரத்தைக் கைப்பற்றிக் கொண்டன.

* * *

நமது வியாபாரக் கப்பல்களை மறுபடியும் உயிர் பெறும்படி செய்யத்திரு. சாராபாய் ஹாஜி சென்ற வருஷம் டில்லி சட்டசபையில் ஒரு மசோதா கொண்டுவந்தார். உள்நாட்டுக் கப்பல் வியாபாரத்தை இந்தியக் கப்பல்களுக்கு ஒதுக்கி வைக்கவேண்டும் என்பதே அதன் நோக்கம். இதிலிருந்து மட்டும் சுமார் 10 கோடி ரூபாய் பெறுமான லாபத்தை ஆங்கிலேயர்கள் அடைந்து வருகிறார்கள். இந்த வியாபாரத்தைச் செய்ய 10 கோடி ரூபாய் பெறுமான கப்பல்கள்போதுமானவை. இந்த வியாபாரத்தில் சுமார் ஆறில் ஒரு பங்கு மட்டும் இந்தியக் கம்பெனிகள் கையில் இருக்கிறது. மிச்சத்தையும் இந்தியக் கம்பெனிகளுக்கு உரிமையாக்குவதே ஹாஜி மசோதாவின் நோக்கம்.

* * *

இம்மசோதா சட்டமானால் இந்தியத் துறைமுகங்களுக்கு மத்தியில் ஓடும் கப்பல்களை நடத்தும் கம்பெனிகளின் சொந்தக் காரர்களுள் பெரும்பான்மையோர் இந்தியர்களாக இருக்கவேண்டும்; நிர்வகிப்போருள் பெரும்பாலோர் இந்தியர்களாக இருக்கவேண்டும். அப்படிப்பட்ட கம்பெனிகளுக்கு மட்டும் இங்கு வியாபாரம் செய்ய அநுமதி தரப்படும்.

* * *

இம் மசோதா கொண்டுவரப் பட்டதும் ஆங்கிலேய வியாபாரிகள் கூச்சலிட ஆரம்பித்து விட்டார்கள். கொள்ளை, திருட்டு என்பன போன்ற கேவலமான சொற்கள் ஆங்கிலேயக் கப்பல்காரர்களால் இங்கிலாந்திலும், இந்தியச் சட்ட சபையிலும், பிற மேடைகளிலும்பிரயோகிக்கப்பட்டன. லார்ட் இன்சுகேப் என்பவர் பி. அண்ட் ஓ. கம்பெனி வருஷக் கூட்டத்தில் பின்வருமாறு பேசினார்: (பி. அண்ட் ஓ. கம்பெனிக்கு இந்திய வியாபாரக் கப்பல்களில் ஆறில்ஐந்து பங்கு சொந்தம்.)

* * *

"இம் மசோதா முதன் முதலாகச் சட்ட சபைக்குள் கொண்டுவரப் பட்டபோது, இதை அநியாயமானது என்று அப்போது இந்திய மந்திரி சொன்னார் (பர்க்கென்ஹெட் பிரபு). இது சட்டமாகி விட்டால் இன்னும் இம்மாதிரியான சட்டங்கள் மேலும் மேலும் செய்யப்படும். தேயிலைத் தோட்டங்கள், காப்பித் தோட்டங்கள், நிலக்கரிச் சுரங்கங்கள், பஞ்சு, சணப்பு, தாள் முதலிய பலவேறு தொழில்களும் இந்தியர்களுக்காக ஒதுக்கி வைக்கவேண்டும் என்று சொல்லுவார்கள். இம்மசோதா ஆங்கிலேய வியாபாரிகளை இந்தியாவை விட்டு வெளியேற்றுவதற்காகக் கொண்டு வரப்பட்டுள்ளது. பிரிட்டிஷ் இராஜப் பிரதிநிதிகளும், பிரிட்டிஷ் கவர்னர்களும், பிரிட்டிஷ் முதலைக்கொண்டு பிரிட்டிஷ்காரர்களும் இந்தியாவை முன்னேற்றி யிருக்கிறார்கள். பிரிட்டிஷ் படைகள் இந்தியாவைக் காப்பாற்றின.....இம் மசோதா சட்டமாகக் கூடாது. இஃது ஆங்கிலேயரைக் கெடுப்பதற்கு வழி. உண்மையில் இஃதுஇந்தியாவின் முன்னேற்றத்திற்குச் சாவுமணியாகும்" என்று பேசினார். என்னே! அவர் இந்திய நாட்டின் முன்னேற்றத்தில் கொண்டுள்ள கவலை! ஹாஜி மசோதா சட்டமாகாமல் தடுப்பது, தங்கள் கம்பெனிகளுடைய லாபத்தைக் குறித்தன்றாம்! இந்தியாவின்நன்மையை நாடியேயாம்! இவர்களுடைய பரோபகாரம் மிகவும் நன்று! இந்தியர்பால் செல்வம் கூடினால் அவர்கள்சுவர்க்கம் புகுவதற்குத்தடையல்லவா? ஆகையால் அவர்களுடைய செல்வத்தைத் தாமே பார்த்துக் கொள்வதாய்ச் சொல்லுகிறார்!

* * *

இம்மசோதாவை எதிர்ப்போர் இன்னும் சிலகாரணங்களைத் தருகின்றனர். இந்தியர்களால் நடத்தப்படும் கப்பல்கள் குறைந்த கூலிக்கு வேலைசெய்ய முடியாது என்பது ஒன்று. இந்தியாவின் முதலை விவசாய வழிகளிலும் பிரிட்டிஷார் புகுந்து வேலை செய்யும் தொழில்கள் அன்றி மிகுந்துள்ள வற்றிலும் செலவழித்து வரவேண்டும் என்பது இன்னொன்று. போட்டியாலும் வியாபாரம் மும்முரமாய்இல்லாத காலங்களில் வேலையில்லாமை முதலிய விஷயங்களாலும் பெருத்த கஷ்டம் ஏற்படும் என்பது வேறொன்று. இவர்கள் கூறும் காரணங்கள் யாவும் பொருத்தமற்றவை என இங்கே எடுத்துக் காட்டுவோம்.

* * *

இம்மசோதா நிற வேற்றுமையால் எழுந்ததா? இந்தக்குற்றம் சாட்டியவர்கள் லார்ட் இன்சுகேப், (பி. ஓ. கம்பெனி டைரக்ட்) ஸர் ஆர்தர் புரூம் (இந்தியச் சட்டசபை அங்கத்தினர்), கர்னல் கிராபோர்ட் (ஐரோப்பியச் சங்கத்தலைவர்) முதலியோர். இந்திய அரசாங்கத்தாரும் இதே எண்ணத்தையுடையவர்கள் என்பது இராஜப் பிரதிநிதியும் ஸர் ஜியார்ஜ் ரெய்னியும் (நிர்வாகசபை வியாபார அங்கத்தினர்) சட்ட சபையில் பேசியதிலிருந்து தெரிய வருகிறது. இம் மசோதாவின்படி இந்தியர்களைப் பெரும்பாலான நிர்வாகிகளாகவும் சொந்தக் காரர்களாகவும் கொண்ட கம்பெனிகளே இந்தியக் கடலோரக்கப்பல் வியாபாரஞ் செய்யலாம் என்பதாகும். பிரிட்டிஷ் கம்பெனியார்கள் இந்தியர்களைப் பங்காளிகளாகச் சேர்த்துக் கொண்டால் என்ன? இந்தியாவிலிருந்து கிடைக்கும் லாபத்தை இந்தியர்கள் சிலருடன் பங்கிட்டுக் கொண்டால் என்ன? சுயஆட்சி பெற்றுள்ள எந்த நாட்டில் இம்மாதிரியான சட்டம் இல்லை? ஐக்கிய நாடுகள், ஜப்பான் முதலிய பல நாடுகள் இதே விதமான சட்டங்கள் செய்திருக்கின்றன. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் குடியேற்ற நாடுகளாகிய கானடா, ஆஸ்திரேலியா-பிரிட்டனுக்குப் பாதகமாக இம்மாதிரியான சட்டங்களைச் செய்திருக்கின்றன. இந்தியா அதே காரியத்தைச் செய்ய முன் வந்தவுடன் நிறவேற்றுமை, கொள்ளை என்ற கூச்சல் கிளம்புகிறது!

* * *

நிற வேற்றுமையை ஆங்கிலேயர்கள் காட்டுகிறார்களா? நாம் காட்டுகிறோமா? முக்கியமான நாணயமாற்றுமிடங்களில் இந்தியர்களுக்கு இடமுண்டா? சென்ற மாதம் இரண்டு இந்தியர்களைப் பால்டிக் நாணயமாற்றிடத்தில் சேர்த்துக் கொண்டதால் தாங்கள் நிறவேற்றுமையைக் காட்டுவதில்லை என ஆங்கிலேயர்கள் சொல்லிக் கொள்கிறார்கள். குடியேற்ற நாடுகளில் ஆஸ்திரேலியா, கானடா, தெற்கு ஆப்பிரிக்கா முதலிய நாடுகளில் இந்தியர்கள் குடியேறக் கூடாது. கிழக்கு ஆப்பிரிக்காவிலும் தெற்கு ஆப்பிரிக்காவிலும் நமது ஏழை இந்திய சகோதரர்களை வெள்ளைக்காரர்கள் நடத்தும் முறைகளைப் பற்றி நினைக்கவும் மனம் பதைக்கிறது. நிற வேற்றுமை பாராட்டுவது நாமா, அவர்களா?

* * *

ஆங்கிலேயக் கப்பற்காரர்கள் வியாபாரத்தைச் சொற்பக் கூலிக்குச் செய்யமுடியும்; மற்றவர்கள் செய்ய முடியாது என்று சொல்லுவதும் இத்தகையதே. கீழே சில புள்ளி விவரங்களைத் தருகிறோம். அதிலிருந்தும் ஆங்கிலேயர்கள் நமக்கு எவ்வளவு

'குறைந்த கூலிக்கு' வேலை செய்கிறார்கள் என்பது தெரியும் :—

இரும்பும், உருக்கும், பெல்ஜியத்திலிருந்து பம்பாய் நகரத்திற்குக் கொண்டுவர (6300 மைல்கள்) 1 டன் நிறைக்கு ரூபாய் 13-12-0. கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு அதே நிறையைக் கொண்டுவர (759 மைல்கள்) ரூபாய் 13-0-0. பஞ்சு பேல்கள் பம்பாயிலிருந்து ஆன்ட்வெர்ப்புக்கு வர (6300 மைல்கள்) 40 அந்தர்களுக்கு ரூபாய் 10-8-0; அதே நிறையுள்ள பஞ்சைத் தூத்துக்குடியிலிருந்து பம்பாய்க்குக் கொண்டுசெல்ல (815 மைல்கள்) ரூபாய் 12-8-0. ஜாவாவிலிருந்து பம்பாய்க்குச் சர்க்கரை (3,210 மைல்) கொண்டுவர 1 டன் நிறைக்கு ரூபாய் 10-12-0; பம்பாயிலிருந்து கொச்சிக்கு (580 மைல்கள்) ரூபாய் 10-2-0.

* * *

இந்தியக் கப்பல்களுக்கு இதை ஒதுக்கி வைப்பதால் இவை உயர்ந்துவிடுமா ?

* * *

இந்தியா விவசாயத்தை முன்னேற்றுவதில் தன் கவனத்தைச் செலுத்த வேண்டும் என்று இவர்கள் சொல்லுகிறார்கள். விவசாயத்தைக் கவனியாமல் நாங்கள் இருக்க முடியாது. ஆனால் நாமும் கைத்தொழில்களிலும் முன்னேறினால்தான் நமது தரித்திரநாராயணன் பிழைப்பதற்கு வழியுண்டு என்பதைப் பொருளாதார சாஸ்திர ஆசிரியர்கள் யாவரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

* * *

ஹாஜி மசோதா, இந்திய ஆங்கிலேயக் கப்பற்காரர் மகாநாடு கூட்டித் தீர்மானிக்க வேண்டும் என்ற காரணம் பற்றி ஒத்தி வைக்கப்பட்டது. இராஜப்பிரதிநிதி இக் கூட்டத்தை ஜனவரிமீ 3, 4உகளில் கூட்டி வைத்தார். ஆங்கிலேயர்கள் வழிவிடாததால் ஒருவித முடிவுக்கும் வராமல் இந்தக் கூட்டம் கலைந்தது. அக்கூட்டத்தில் ஆங்கிலேயப் பிரதிநிதியொருவர் கூறிய வழியைப் பின்பற்றினால் உள்நாட்டுக் கப்பல்கள் நம்மவர்களுக்குச் சொந்தமாக நூறு வருஷங்கள் ஆகும்! மேலும் இந்திய அரசாங்கத்தார் இந்த ஆங்கிலேயக் கப்பல்காரர் விட்டுத்தரும் அளவுக்குத் தகுந்த அளவு மாற்றுக் கொடுக்க வேண்டுமாம்! நாம் என்ன இவர்களிடம் பிச்சையா கேட்கிறோம்? நமது உரிமைகளைத் தானே கேட்கிறோம்?

* * *

சட்டத்தின் உதவியில்லாமல் இந்தியாவின் வியாபாரக் கப்பல் படையை வளர்ப்பதற்கு ஒருவழியும் கிடையாது. ஆங்கிலேயர்களுடன் போட்டியிட்டு நாம் வெற்றி பெறுதல் முடியாது. எட்டுக்கோடி ரூபாய் ஆங்கிலேயக் கப்பல்களுடன் போட்டியிட்டுத் தொலைந்தது. இன்னும் நாம் நஷ்டமடையாமல் இருக்க வேண்டுமானால் இம் மசோதாவை ஆதரித்துச் சட்டமாக்க முயலுதல் வேண்டும்.

"பித்தன்"



## முக்கிய பிரச்சினை என்ன?

(ஸ்ரீ மான் க. சந்தானம்)

இந்தியாவில் யார் அரசாண்டால் என்ன? டில்லி சட்டசபை அறைக்கு யார் முக்கியஅதிகாரி? சர்க்காரா, கனம் படேலா? இதுதான் முக்கியபிரச்சினை. ஒரு மாதமாக நமது பத்திரிகைகளைப் பார்த்தால், இதைப்பற்றி ஏதாவது சந்தேகம் இருக்க முடியுமா? பர்டோலி வரிகொடா இயக்கத்தைப்பற்றிக்கூட இவ்வளவு பிரமாதமான கிளர்ச்சி ஏற்படவில்லை! "இன்றைக்குமாளவியா இராஜப்பிரதிநிதியைப் பார்த்தார். ஜின்னா படேலைப் பார்த்தார். இருவரும் கிரிராரைப் பார்த்தார்கள். இரவில் முக்கியஸ்தர்களின் கூட்டம். சமாதானத்திற்கு இடமேற்பட்டிருக்கிறது. மறுபடியும் மேகம் கறுத்துவிட்டது. இருதரத்தாரும் சண்டையில், மும்முரமாக இருக்கிறார்கள்." என்று தேச மகா ஜனங்கள் பரபரப்புடன் படித்து வருகிறார்கள்.

"தேக்கிண்ணத்தில் புயற்காற்று" என்ற வசனம் சிலருக்கு மனதில் உதிக்கலாம். ஆனால் எங்கிருந்தாலென்ன? புயற்காற்றுத்தானே? இந்தப் புயற்காற்றினால் வேறு கெடுதியில்லாமற் போனால் கவலையில்லை. பொது ஜனங்களின், கவனத்திற்கு வேறு விஷயங்கள் இல்லாவிடில் கனம் படேலின் சாமர்த்தியத்தைக் கண்டு மகிழ்ச்சியடைவதை ஏன் ஆட்சேபிக்கவேண்டும்?

ஆனால் பத்திரிகைகளின் மூலைகளில் மகாத்மாகாந்தி சட்டமறுப்புஆரம்பிக்கப்போவதாகப் படித்து வருகிறோம். பூரணசுயராஜ்யம் பெறதேசத்தின் தியாகத்தை ஒன்றுதிரட்டி சாத்வீகப்போர் தொடங்கப்போவதாகத்தெரிகிறது. இவைகளில், எது முக்கிய பிரச்சினை என்று பலருக்கு சந்தேகம் வந்திருக்க வேண்டும்.

சட்டசபைக்கும் காங்கிரஸ் சபைக்குமுள்ள வித்தியாசத்தை, இவ்விரண்டு விஷயங்களே நன்கு விளக்குகின்றன. சட்டசபைகளைக் கைப்பற்றி விட்டால், தினந்தோறும் நம் புத்தி சாமர்த்தியத்தால், வாக்குச் சண்டைகள் போடலாம். அவைகளில் ஜெயித்தால், சட்டசபை நடக்கும் அறைகளின் பேரில் அதிகாரம் பெறலாம். இவ்வறைகளை விட இந்தியா பெரியது. அதன் ராஜ்யத்தைப் பெறுவதே நமது இலட்சியமென்போர்கள் சட்டசபைகளைக் கொண்டு ஒன்றும் செய்ய முடியாது. வாக்கு வீரத்தினால் ஒரு காரியமும் பலியாது. காங்கிரஸ் சபையும் சட்ட மறுப்புந்தான் சாதனங்கள்.

கனம் படேல் சென்ற தேர்தல் காலத்தில் காங்கிரஸ் உறுதிமொழியில் கையெழுத்திடவில்லை. ஆனால் இதுவரையில், அவர் ஒரு முக்கிய காங்கிரஸ் தலைவர் என்றே இந்திய ஜனங்கள் அனைவரும் நம்பியிருந்தனர். காங்கிரஸ் தீர்மானத்தை ஏற்றுக் கொண்டு சட்டசபை அக்கிராசனத்தை ராஜீனாமா செய்து விட்டு, மகாத்மா காந்தி, சர்தார் படேல் இவர்களுடன் சேர்ந்திருந்தால், அரசாங்கத்தாருக்கு நலமா? நஷ்டமா? சர்க்கார் தங்களிஷ்டப்படி இரண்டு போலீஸ்காரர்களை டில்லி சட்டசபைக்குள் வைத்திருப்பார்கள். ஆனால் சர்வகட்சி மகாநாட்டுப் பேச்சே நின்றிருக்கும். சாத்வீகப் போருக்கு ஒரு திறமை வாய்ந்த தளகர்த்தர் கிடைத்திருப்பர்.

சட்டசபைகளில் நமது பெரிய தலைவர்கள் சென்று தேசத்தின் கவனத்தை அவைகளின் நடவடிக்கைகளில் செலுத்தும் வரை காங்கிரஸ் சபையின் செல்வாக்கு குறையும். ஸ்வராஜ்ய லட்சியம் மறைந்து சில்லரை சாதகங்களைப் பெறும் காரியங்களில், நாம் ஈடுபட்டு விடுவோம். அப்படியே சட்ட சபைகளை, தலைவர்கள் விட்டு விட்டால், காங்கிரஸ் சபையின் செல்வாக்கு வளர்ந்து சுதந்திரப் போரின் வேகம் அதிகரிக்கும். சுதந்திரம் பெற்றபின் சட்டசபைகள் வேண்டும். அப்பொழுது காங்கிரஸ் சபையால் பிரயோசனமில்லை. அதற்குமுன் சட்டசபைகளால் பயனில்லை. காங்கிரஸ் மகாசபை யொன்றையே நாம் ஆதரிக்கவேண்டும்.



## அரசாங்கத்தார்-படேல் பிணக்கு

### சமாதானமாக முடிந்தது

20-2-30-ல் கூடிய இந்தியா சட்டசபைக்கூட்டத்தில், ஸ்ரீ மான் வி. ஜே. படேல், இராஜப்பிரதிநிதியிடமிருந்து பதினெட்டாந் தேதி யிட்டுக்கிடைத்த ஒரு கடிதத்தைப்படித்தார். அது வருமாறு :—

"அன்புள்ள நலவருக்கு,

சமீபத்தில் நான் தங்களுடன் சம்பாஷணை நடத்தியதற்குப் பிறகு, தற்போழ்து வாதத்திற்குக் காரணமாயுள்ள விஷயங்களை யொட்டி, அரசாங்கத்தாருடைய யோசனைகளை அவர்கள் சார்பாக நான் தங்களுக்குத் தெரிவிக்கக் கடமைப் பட்டிருக்கிறேன். இவைகள் அநுபவசாத்தியமாகவோ, அல்லது ஒரு சம்பிரதாய முறையாகவோ இருக்குமென்று நம்புகிறேன். சட்டசபைத் தலைவரும், சட்டசபை அங்கத்தினர்களும் தங்கள் கடமையைச்செய்து கொண்டிருக்கும் போது, அவர்களுக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்கப் பட்டிருக்கிறதென்னும் விஷயத்தில் மாகாண அரசாங்கமும் இந்தியா அரசாங்கமும் கொண்டிருக்கும் அபிப்பிராயத்தையே நீங்களும், மற்ற உத்தியோகஸ்தரல்லாத அங்கத்தினர்களும் கொண்டிருக்கிறீர்கள் என்பதை நான் சந்தேகிக்கமுடியாது. இந்நோக்கத்தை யடைய எடுத்துக் கொள்ளப்படும் அநுபவ சாத்தியமான முறைகளில் ஒற்றுமை ஏற்பட்டுவிட்டதேயானால், அப்படி அநுசரிக்கப்படும் முறைகள்மேற்படி நோக்கத்தையடையப் போதுமானவையாக இருந்துவிட்டால், பொதுவான அமிசங்களைக்குறித்து வாதம் செய்வது அநாவசியமாகிவிடும்.

சட்டசபைக் கட்டிடத்தின் உட்பாகங்களில் அளிக்கப்பட வேண்டிய பாதுகாப்பைப் பற்றி முதலில் கவனிப்போம். சட்ட சபையின் உள்பாகத்தில் பாது காப்புச் சம்பந்தமான விஷயங்களைப் பற்றி ஏற்பாடு செய்ய ஓர் உயர்தர போலீஸ் உத்தியோகஸ்தரை அரசாங்கத்தார் நியமிக்க உத்தேசித் திருக்கின்றனர். இவர், சட்டசபைத் தலைவருக்குப் பொறுப்பாளியா யிருப்பர். 'சட்டசபை பந்தோபஸ்து உத்தியோகஸ்தர்' என்னும் பெயருடன் இவர் இருப்பார்.

ஏற்கெனவே சட்டசபைத் தலைவரால் அங்கீகரிக்கப்பட்ட முன்ஜாக்கிரதையான ஏற்பாடுகள் போதுமானவை யல்லவென்று இந்தப் போலீஸ் உத்தியோகஸ்தருக்கு, அவருடைய விசேஷ அநுபவத்தைக் கொண்டு தோன்றினால், அவர், மேற்குறித்த விஷயத்தைப் பற்றித் தமது போலீஸ் இலாகாவின் மேல் உத்தியோகஸ்தருக்குத் தெரிவிப்பார். அவர், சட்டசபை பந்தோபஸ்து உத்தியோகஸ்தரின் அபிப்பிராயத்தை அங்கீகரிப்பாரானால், உடனே சட்டசபைத் தலைவருக்குத் தெரிவிப்பார். சட்டசபைத் தலைவர், தமது அபிப்பிராயத்துடன் மேற்படி விஷயத்தைச் சபையோடுகூடிய கவர்னர்-ஜெனராலுக்கு அறிவிப்பார். அப்பொழுது, சம்பந்தப்பட்ட அதிகாரிகள், சட்ட சபைத் தலைவருடன் இவ்விஷயத்தைப் பற்றிப் பேசச் சௌகரியமாகும்.

இத்தகைய ஆலோசனைகளுக்கு அவகாசமில்லாதபடி, அவசரமான நிலைமை யொன்று ஏற்பட்டுவிட்டால், அல்லது மேற்படி சட்டசபை பந்தோபஸ்து உத்தியோகஸ்தர், தலைவரின் உத்திரவைப் பெற முடியாமற் போய்விட்டால், போலீஸ் உத்தியோகஸ்தருக்குரிய அதிகாரங்களைக் கொண்டும், அப்பொழுது ஏற்பட்டுள்ள நிலைமையை உத்தேசித்தும் தகுந்த நடவடிக்கையை அவர் எடுத்துக் கொள்ளலாம். இந்த மாதிரியான சந்தர்ப்பங்களில், தலைவரின் அங்கீகாரத்தைப்பெற்றேஇந்த நடவடிக்கைகளை அவர் எடுத்துக் கொள்கிறார் என்று கருதப்படும்.

### விசேஷ உத்தியோகஸ்தர்கள்

சட்டசபை ஊழியர்கள் மூலமாகப் போதிய பாதுகாப்பு பெறப்படவேண்டுமென்ற விருப்பம், சட்டசபை அங்கத்தினர்களுக்கு இருக்கிற தென்பதை அரசாங்கத்தார் அங்கீகரித்துக் கொள்கின்றனர். இதற்குத்தக்க உத்தியோகஸ்தர்களை நியமனம் செய்வதில் ஒத்துழைக்க சட்டசபை அங்கத்தினர்கள் சித்தமாயிருப்பார்கள் என்பதும் அரசாங்கத்தாருக்குத் தெரியும். இந்தப் பாதுகாப்புச் சிப்பந்திகள், சட்டசபைச் சிப்பந்திகளின் ஒருபாகமாக இருப்பர். இவர்கள், தலைவருடைய அதிகாரத்திற்குட்பட்டு அவரால் நியமிக்கப்பட்ட ஓர் உத்தியோகஸ்தரின்கீழ், சட்டசபைத் தலைவர் கூறும் உடைகளை அணிந்து கொண்டு வேலை செய்வார்கள். இந்த விசேஷ சிப்பந்திகள் நியமிக்கப்படும் வரை, சட்டசபை பந்தோபஸ்து உத்தியோகஸ்தரின் கீழ் வேண்டியளவு போலீஸ் உத்தியோகஸ்தர்களை அரசாங்கத்தார் அளிப்பர். இவர்கள், தலைவரின் விருப்பப்படி, பிரத்தியேகமான ஓர் அடையாளத்தை புஜத்தில் அணிந்து கொள்ளலாம்.



சட்டசபை அங்கத்தினர்கள், இந்த ஏற்பாட்டை அங்கீகரித்துக் கொள்வார்களானால், மேற் கூறப்பட்ட பந்தோபஸ்து வேலைக்குத் தகுந்த ஓர் உத்தியோகஸ்தரை உடனே அனுப்ப இந்தியா அரசாங்கத்தார் சித்தமாயிருக்கின்றனர். அப்பொழுது, நீங்கள், எவ்வித காலதாமதமுமின்றி, சட்டசபைக் காரியதரிசி, மேற்கூறப்பட்ட பந்தோபஸ்து உத்தியோகஸ்தர் இவர்களுடைய ஆலோசனையின் பேரில் தகுந்த சிப்பந்திகளைத் தேர்ந்தெடுப்பீர்கள் என்று அறிகிறேன்.

இந்த ஏற்பாடுகள், தங்களுக்கும், சட்டசபை அங்கத்தினர்களுக்கும் திருப்தி அளிக்குமானால், இப்பொழுதிருக்கும் ஏற்பாட்டிற்குத் தகுந்த பிரதியாகு மென்று அரசாங்கத்தாரும் கருதுவர் என்று நான் கூறமுடியும்.

சட்டசபையின் வெளிப்புறத்தைப்பற்றிய விஷயம் இன்னும் ஆராயப்பட வேண்டும். அதற்கிடையே, சட்டசபை வெளிப்புறத்திலுள்ள போலீசாருக்குப் பிறப்பிக்கப்படும் எல்லா உத்தரவுகளும் மாகாண அரசாங்கத்தின் யோசனையின் பேரில் தலைவரின் அங்கீகாரத்தைப் பெற்றுப் பிறப்பிக்கப்பட வேண்டுமென்று இந்தியா அரசாங்கத்தார் மாகாண அரசாங்கத்தாருக்குத் தெரிவிப்பார்கள்.

இரு சார்பிலும் நல்லெண்ணத்துடன் நடந்து கொண்டால், இந்தியா அரசாங்கத்தின் சார்பாக நான் வெளியிட்டுள்ள இந்த ஏற்பாடு, சபை அங்கத்தினர்களுக்கு அசௌகரியத்தை உண்டுபண்ணி அரசாங்கத்திற்கும் தலைவருக்கும் கவலையை அளித்துவந்த சிக்கலான நிலைமையைத் தீர்த்துவிடுமென்று நம்புகிறேன்."

### ஸ்ரீ படேலின் கூற்று

மேற்கூறிய விஷய சம்பந்தமாக அரசாங்கத்தாருக்கும் எனக்கும் ஏற்பட்ட அபிப்பிராய வேற்றுமைகளை அங்கத்தினர்கள் அறிவார்கள். இராஜப்பிரதிநிதியின் கடிதத்தில் திருப்திகரமான ஒரு முடிவு கூறப்பட்டிருக்கிறது. இந்த விஷயத்தைப்பற்றிச் சட்ட ரீதியான அமிசங்களைக் கவனியாமல், அரசாங்கத்தார் இப்பொழுது ஒரு சம்பிரதாயத்தை ஏற்படுத்த முயன்றிருக்கின்றனர். இஃது எதிர்காலத்தில் நிரந்தரமான வேலை செய்வதற்குத் தகுந்த ஆதாரத்தை அளிக்கிறதென்று கருதுகிறேன். இந்த ஏற்பாடு, எந்த மனோபாவத்துடன் அளிக்கப்பட்டதோ அதே மனோபாவத்துடன் நான் இதனை ஏற்றுக்கொள்கிறேன். முக்கியமான இந்த விஷயம் தீர்க்கப்பட்டு விட்டதால் 24-2-30 முதல் காலரிகளைப் பார்வையாளர்களுடைய உபயோகத்திற்குத் திறந்துவிடுமாறு நான் உத்திரவிடுகிறேன்.

### ஸ்ரீமான் ஆர்தர் மூரின் கோபம்

ஸ்ரீமான் படேல் இராஜப் பிரதிநிதியின் கடிதத்தைப்படித்து முடித்து, காலரிகள் பார்வையாளர்களுக்குத் திறந்து விடப்படும் என்று தெரிவித்தவுடன், ஸ்ரீ மான் ஆர்தர் மூர் என்னும் ஐரோப்பிய அங்கத்தினர் சில விஷயங்களைத் தெரிவிக்க விரும்பினார்.

ஸ்ரீ மூர் :—ஐயா, நீங்கள் ஒரு மாதத்திற்கு முன்பு, உங்களுடைய அதிகாரம் முடிவானதென்றும், உங்களுடைய ஆதிக்கம் பூர்ணமானதென்றும் கூறினீர்கள்.

தலைவர் :—கனம் அங்கத்தினர் தமது இடத்தில் அமர்வாரா? விதிகளைப்பற்றி அங்கத்தினர் ஏதேனும் ஆட்சேபத்தை எழுப்ப விரும்புகிறாரா?

ஸ்ரீ மூர் :—இந்தச்சபையை முக்கியமாகப் பாதிப்பதாகிற ஒரு விஷயத்தைப்பற்றி இந்தச்சபையின் அபிப்பிராயம் கேட்கப்படவில்லை. அது சம்பந்தமாக நான் சில விஷயங்களைக்கூற விரும்புகிறேன். அவை கேட்கப்பட வேண்டும்.

தலைவர் :—கனம் அங்கத்தினர் அதற்காக ஒரு தீர்மானம் கொண்டுவர வேண்டும்.

ஸ்ரீ மூர் :—நான் ஏற்கனவே ஒரு பிரேரணையை அனுப்பியிருக்கிறேன். அது வந்தால்—(ஒழுங்கு, ஒழுங்கு, என்ற கூச்சல்) எனக்கு இங்குப்பேச உரிமையுண்டு. உங்களிடத்தில் நியாயபுத்தி இருக்கிறதென்பது எனக்குத்தெரியும். அதனை நான் வேண்டிக் கொள்கிறேன்.

தலைவர் :—கனம் அங்கத்தினர், இச்சபையின் விதிகளுக்குட்பட்டே நடக்கவேண்டும்.

ஸ்ரீ மூர் :—நான் சொல்வதைத் தடுக்கக் கூடிய விதி எதுவுமில்லை.

தலைவர் :—விதிகள் சம்பந்தமாக ஏதேனும் ஆட்சேபமிருந்தால்—(இச்சமயத்தில்ஸ்ரீ மூர் தமது இடத்தில்நின்றுகொண்டேயிருந்தார்.) தலைவர் எழுந்து பேசுகையில் கனம் அங்கத்தினர் தமது இடத்தில் அமர்ந்துகொண்டுவிட வேண்டும். சபையின் முன்னர்க் கிளத்தப்பட்டிருக்கும் ஒரு விஷயத்தைப் பற்றி கனம் அங்கத்தினருக்கு ஏதேனும் ஆட்சேபமிருந்தால் அது கேட்கப்படும். அப்படி ஆட்சேபமொன்றுமில்லாமல், தலைவருக்கு ஏதேனும் தெரிவிக்க வேண்டுமென்று கனம் அங்கத்தினர் விருப்பங்கொண்டால், அவர், தலைவருடைய அறைக்கு வந்து பேசலாம்.

ஸ்ரீ மூர் :—சபையின் ஆலோசனையைக் கேளாமலே, நீங்கள் ஒரு விஷயத்தை ஏற்றுக்கொண்டு விட்டீர்கள். அதுவே என் ஆட்சேபம்.

ஸ்ரீ கயாபிரசாத் சிங் :—(ஸ்ரீ மூரைப் பார்த்து) நீங்கள் ஏன் இவ்வளவு கோபமடைந்திருக்கிறீர்கள்?

தலைவர் :—கனம் அங்கத்தினர் கோபமடைய வேண்டிய அவசியமில்லை. அவருக்கு இந்தச் சபையில் போதிய ஆதரவு இருக்கும் பட்சத்தில், தலைவரின்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானங் கொண்டுவந்து, தலைவரை, அவருடைய பதவியினின்று ராஜி செய்யுமாறு கூறலாம்.

ஸ்ரீமூர் :—நான் தற்போது, நம்பிக்கைக் குறைவு சம்பந்தமாக ஒன்றுங் கூறவில்லை. இப்பொழுது நீங்கள் தெரிவித்த விஷயங்களைப்பற்றி நான் சில வார்த்தைகள் தெரிவிக்க விரும்புகிறேன்.

தலைவர் :—அதைப்பற்றி எதுவுங் கூற கனம் அங்கத்தினருக்கு உரிமையில்லை.

ஸ்ரீமூர் நின்றுகொண்டேயிருந்தார்.

தலைவர் :—கனம் அங்கத்தினர் தமது இடத்தில் அமர்வாரா? நான் இப்பொழுது படித்த அறிக்கையைப்பற்றி எவ்வித அபிப்பிராயமுங் கூற கனம் அங்கத்தினருக்கு உரிமையில்லை.

ஸ்ரீ மூர் :—நீங்கள் படித்த அறிக்கையைப் பற்றி அபிப்பிராயந் தெரிவிக்க எனக்கு உரிமையுண்டு. (ஒழுங்கு; உட்காருங்கள் என்ற கூச்சல்) ஐயா, நான் யார் பொருட்டுப் பேசுகிறேனென்றால் :—

தலைவர் :—கனம் அங்கத்தினர் தமது இடத்தில் அமர்வாரா?

ஸ்ரீ மூர் :—உங்களிடம் இருக்கும் நியாய புத்தியை நான் வேண்டிக் கொள்கிறேன். (ஒழுங்கு. ஒழுங்கு என்ற கூச்சல்)

ஓர் அங்கத்தினர் :—நீங்கள் கூறுவதை நாங்கள் கேட்கப் போவதில்லை.

ஸ்ரீ மூர் :—நான் சொல்லப் போவதைக் குறித்து நீங்கள் அஞ்சுகிறீர்களா?

ஸ்ரீகயாபிரசாத் சிங் :—நீங்கள் கண்டபடி யெல்லாம் பேசுகிறீர்கள்.

ஸ்ரீ மூர் :—நீங்கள் அமைதியாக இருந்து, நான் கூறுவதைக் கேட்டால், ஒருகால், உங்கள் அபிப்பிராயத்தை நீங்கள் மாற்றிக் கொள்ளவும் கூடும்.

தலைவர் :—சபை விதிகளின்படி கனம் அங்கத்தினருக்குப் பேச உரிமையில்லை என்று ஏற்கெனவே நான் தெரிவித்திருக்கிறேன்.

ஸ்ரீ மூர் :—நான் கூறப்போவதைப்பற்றி நீங்கள் அச்சப்படுகிறீர்களா?

தலைவர் :—கனம் அங்கத்தினர் தமது இடத்தில் அமர்வாரா?

ஸ்ரீ மூர் :—நான் கேட்கப்பட வேண்டுமென்று விரும்புகிறேன்.

தலைவர் :—இந்தச் சபையின் நடைமுறைகளைக் கனம் அங்கத்தினர் விரும்பவில்லையானால், சபையை விட்டு வெளியே போக அவருக்கு உரிமை உண்டு.

ஸ்ரீ மூர் :—நான் இங்கேயே இருக்க விரும்புகிறேன். நான் இந்தச் சபையின் அங்கத்தினன்.

தலைவர் :—அப்படியானால் கனம் அங்கத்தினர் சபையின் விதிகள்படி நடந்து கொள்ள வேண்டும்.

ஸ்ரீ மூர் :—நான் எந்த விதியை மீறி நடக்கிறேன்?

தலைவர் :—இந்தச் சபையின் எல்லாவிதிகளையும் நீங்கள் மீறி நடக்கிறீர்கள்.

ஸ்ரீ மூர் :—இல்லை, ஐயா! ஓர் ஏற்பாட்டை நீங்கள் அங்கீகரித்துக் கொண்டதாகத் தெரிவித்தீர்கள். அதைப்பற்றி வாதிக்க எங்களுக்கு உரிமையில்லையா? இதைப்பற்றிச் சபைக்கு ஒன்றுமே தெரியாது. நீங்கள் கூறியதென்னவென்றால்—

தலைவர் :—ஸர் ஜார்ஜ் ஷூஸ்டர் வருமானவரி மசோதாவைப் பிரேரணை செய்வாராக.

இதனுடன் ஸ்ரீ ஆர்தர் மூர் தமது இடத்தில் அமர்ந்து விட்டார். இவர், ஸர்டார்லே விங்க் ஸ்லேயைத் தலைவராகக் கொண்ட ஐரோப்பியக் கட்சியினின்றும் இராஜீநாமா செய்து விட்டார்.

### சட்டசபை பந்தோபஸ்து உத்தியோகஸ்தர்

பழைய டெல்லியில் போலீஸ் டெபுடி சூப்பிரண்டெண்டாக வேலை பார்த்துவரும் ஸ்ரீ மலிக்தேவி தயாளர் என்பார், சட்டசபை பந்தோபஸ்து உத்தியோகஸ்தராக நியமிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

## சந்தை இரைச்சல்

"காட்டான்" கேட்டது

காலஞ் சென்ற ஸ்ரீமான் வி. கிருஷ்ணசாமி ஐயர் சென்னையில் முதன்முதலாக ஏழு வருஷம் வக்கீல் வேலை பார்த்தாராம். போதிய வரும்படி கிடைக்காததைக் கண்டு, நாகப்பட்டணம் சென்று தமது தொழிலை நடத்த உத்தேசித்தாராம். ஆனால் அவருக்கும் நாட்டுக்கும் நல்ல காலமாகச் சென்னையிலேயே தங்கிவிட்டாராம். சென்னையிலுள்ள ஜூனியர் வக்கீல்கள் கவனிக்க!

* * *

காலஞ்சென்ற நீதிபதி மணிஐயர், வக்கீலாயிருந்தபோது ஒரு வழக்கில் 'பிளெயிண்டு' தயாரித்துக் கொண்டிருந்தாராம். அப்பொழுது அவரிடத்தில் ஜூனியராய் இருந்த ஸ்ரீ மான் பி. ஆர். சுந்தரய்யர், 'பிளெயிண்ட்' தயாரிப்பதைப் பற்றி வேறொரு யோசனை கூறினாராம். இதனை ஏற்றுக்கொண்டதன் பயனாக, வழக்கு வெற்றியடைந்தது. உடனே மணி ஐயர், தமது கட்சிக்காரரை அழைத்து, தமது ஜூனியர் கூறிய யோசனையினாலேயே வழக்கு வெற்றி பெற்றதென்று, கட்சிக்காரர் முன்னிலையிலேயே தமது ஜூனியரைப் பாராட்டினாராம். சென்னையிலுள்ள சீனியர் வக்கீல்கள் கவனிக்க!

* * *

இலட்சுமணபுரி ஜில்லா தலைபோர்டின் வரான பண்டித ஹரிஹரநாதர் என்பார் சமீபத்தில் இராஜப்பிரதிநிதி, மேற்படியூருக்கு விஜயஞ் செய்திருந்தபோது, அவரை வரவேற்கும் சம்பவத்திலும், ஒரு விருந்திலும் கலந்துகொண்டார். இவர் காங்கிரஸ் சுயராஜ்யக்கட்சிக்காரர். இவருடையசெயலை இலட்சுமணபுரி காங்கிரஸ் கமிட்டியார் கண்டிக்கின்றனர். நம்மை, இவருக்காக வக்கீலாகவைத்து வாதாடச்சொன்னால் நம் சொந்த ஹோதாவிலேயே மேற்படி சம்பவங்களுக்கு இவர் சென்றதாகவும், காங்கிரஸ் வாதி என்ற ஹோதாவில் செல்லவில்லை யென்றும் சுலபமாகக் கூறி விடுவோம்!

* * *

காந்தியடிகள், அஹிம்சாதர்மப் போரைத் தொடங்கிவிட்டார். பூரண சுயராஜ்யப்புலிகள் இப்பொழுது எந்தக் குகையில் பதுங்கிக் கொண்டிருக்கின்றன வென்று சந்தையில் பலர் கேட்கின்றனர்.

* * *

பூரண சுயராஜ்யம் என்ற பதத்திற்கு வேறுபொருள்கள் இருக்கின்றனவாவென்று ஆலோசிக்கச்சென்னையில் சிலகாங்கிரஸ் வக்கீல்கள் ஒருமகாநாடு கூடப்போகிறார்களாம்.

* * *

காந்தியடிகள் இப்பொழுது செயலில் இறங்கிவிட்டதால், சென்னைக் கடற்கரையில், அலைகளோடு போட்டி போடும் பிரசங்கங்கள் இனி நடைபெறுவென்று ஒரு வதந்தி உலவுகிறது.

* * *

சென்னைக் காங்கிரஸ் வாதிகள் இனிக் கடற்கரைக்குப் பேச வரமாட்டார்களாதலால், நாம் ஏன் இனி அந்தக் 'கோட்டை' யைப் பிடித்துக் கொள்ளக்கூடாது என்று சென்னை மிதவாதிகள் அந்தரங்கமாகச் சிந்தித்து வருகிறார்களாம்.

* * *

மிதவாதிகள் கடற்கரையில் கூட்டம் போடுவதனால், அவர்களுக்கு விசேஷ சௌகரியம் ஒன்று இருக்கிறது. அவர்கள், இராஜபக்தி தீர்மானத்தை நிறைவேற்றி, அதை அப்படியே கப்பலில் ஏற்றி இங்கிலாந்துக்கு அனுப்பி விடலாமல்லவா?

* * *

சாதாரணமாகத் தேர்தல் காலங்களில் அபேட்சகர்களின் சார்பாக வேலை செய்யும் தொண்டர்கள், தங்களுக்கு இப்பொழுது நடைபெற்று வரும் இடைத் தேர்தல்களில் நல்ல 'அறுவடை' இல்லை யென்று வருத்தமுற்றிருக்கிறார்கள்.

* * *

வக்கீல் :—காங்கிரசில் வக்கீல்களே பெரும்பான்மையோராக இருக்கவேண்டும்.

வியாபாரி :—வியாபாரிகள் அதிகமாக இருந்தால்தான், காங்கிரஸ் நிதிக்கு அதிக பணங் கொடுப்பார்கள்.

வக்கீல் :—கோர்ட்டில் செல்லுபடியாகும் வண்ணம், பணத்துக்குக் கணக்குவைக்கும் சக்தி எங்களிடமன்றோ இருக்கிறது!

## உதிர்ந்த மலர்கள்

பாபு புருஷோத்தம தாஸ் தாண்டன் :—நான், இராமேசுவரம், மதுரை முதலிய இடங்களிலுள்ள கோயில்களுக்குச் சென்றிருக்கிறேன். கோயில்களுக்குள் செல்வதற்கு முன்னர், ஹிந்துக்கள், தங்கள் மிதியடி முதலியவைகளை வெளியே விட்டு வைக்கும்படி கூறப்படுகிறார்கள். ஆனால் ஐரோப்பியர்கள், பூட்ஸ்களுடன் உள்ளே அநுமதிக்கப் படுகிறார்கள்.

* * *

டாக்டர் மூஞ்சே :—ஒப்பந்தங்களினாலும், உடன்படிக்கைகளினாலும் எப்பொழுதேனும் சமாதானம் ஏற்பட்டிருக்கிறதா? அப்படியானால் 1916-ம் வருஷத்து இலட்சுமணபுரி ஒப்பந்தப்படி ஏன் சமாதானம் உண்டாகவில்லை?

* * *

மேற்படியார் :—வகுப்பு வாதத்திற்கும், அரசியல் வேற்றுமைகளுக்கும் தேசிய வாதமே தகுந்த மருந்தாகும்.

* * *

மேற்படியார் :—சர்வகட்சி மகாநாட்டின் பயனைக் குடியேற்ற நாட்டந்தஸ்து அளிக்க முடியாதென்று லார்ட் இர்வின் தெளிவாகக் கூறிவிட்டார். இந்த உண்மையை ஜனங்கள் உடனே தெரிந்துகொள்வது நலம்.

* * *

எம். ஆர். ஜயகர் :—அந்நிய நாட்டில் அந்நிய பாஷையில், அந்நியப் பட்டங்களுக்காக நடத்தப்படும் வைத்தியப் போட்டிப் பரீட்சையில், 1914-ம் ஆண்டிக்குள் இந்தியர்கள் நூற்றுக்கு ஐம்பது வீதம், உத்தியோகம் பெற்றார்கள்.

* * *

ஏ. அரங்கநாத முதலியார் :—காங்கிரஸை நாம் புறக்கணித்து விடமுடியாது. தேசம் தற்போது எழுச்சி யுற்றிருப்பதற்குக் காங்கிரஸே காரணமாகும். கூடியவரை, காங்கிரஸ் திட்டங்களை நிறைவேற்ற நாம் முயல வேண்டும்.

* * *

டாக்டர் பட்டாபி சீதாராமய்யா :—சிராபுத பாணிகளான, ஒற்றுமையில்லாத, ஆளப்படும் ஒரு சமூகத்தார் தங்களுடைய தன்மதிப்பைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டுமானால், தங்கள் ஒற்றுமையை நிலை நிறுத்திக்கொள்ள வேண்டுமானால் சட்டமறுப்பே தகுந்த சாதனம் என்று காந்தியடிகள் அடிக்கடி கூறியுள்ளார்.

* * *

பித்தாபுரம் மகாராஜா :—கிண்டி குதிரைப் பந்தயத்திலிருந்து என் நண்பர் ஒருவர் திரும்பி வந்து கொண்டிருக்கையில், பாதையின் ஓரமாக ஒருவர் கண்ணீர் விட்டழுது கொண்டிருப்பதைப் பார்த்தார். உடனே, தமது மோட்டாரை நிறுத்திக் கொண்டு, விஷயம் என்ன வென்று அழுது கொண்டிருந்த மனிதனைக் கேட்டார். "நான் இருபதினாயிரம் ரூபா பெறுமான சொத்தைக் குதிரைப் பந்தயத்தில் இழந்து விட்டேன். என் கதி அதோகதியாகி விட்டது" என்று அவர் கூறினார்.

* * *

பண்டித ஜவஹரிலால் நேரு :—இந்தியாவின் தேசியக் கொடி நமது சுதந்திர இச்சையின் சின்னமாக விளங்குகிறது. அது நீல ஆகாயத்தில் கம்பீரமாகப் பறந்து கொண்டிருப்பதை நாம் பார்த்தால் நமது உள்ளம் மகிழ்ச்சியடைகிறது. நமக்குப் 'புதிய பலம் உண்டாகிறது. நாம் வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கை நமக்கு ஏற்படுகிறது.

* * *

எஸ். எஸ். ஐயர் :—ஆசார சீர்திருத்தத்திற்கு மூன்று விஷயங்கள் இன்றியமையாதன. முதலாவது பாமர ஜனங்களுக்குக் கல்வி புகட்ட வேண்டும். இரண்டாவது, ஆசார சீர்திருத்தக்காரர், தாங்கள் கூறும் திருத்தங்களை அநுஷ்டிக்கிறவரா யிருத்தல் வேண்டும். மூன்றாவது, ஜனங்களே இச்சீர்திருத்தங்களைத் தொடங்க வேண்டும்.

* * *

ஆசிரியர் வாஸ்வானி :—இந்தியாவின் எதிர்கால வாழ்வு பலாத்காரத்திலோ அஹிம்சையிலோ இல்லை. ஆனால் அஃது, உலக சக்திகளோடு ஒத்துழைக்க வேண்டும்.

* * *

திவான்பகதூர் பி. முனிசாமி நாயுடு :—கிராமங்களில் செய்யப்பட வேண்டிய வேலை மிக முக்கியமானது. லாகூர் தீர்மானங்கள் வெற்றிபெற வேண்டுமானால், அதற்கு அடிப்படையாக இருப்பது அஹிம்சா தர்மமேயாகும்.

* * *

மேற்படியார் :—சர்வகட்சி மகாநாடு வெற்றியடையா விட்டால், தேசத்திலர், தங்கள் அரசியல் இலட்சியமாகக் கொள்ள வேண்டுவது சுயேச்சையே யாகும். என்னுடைய ஜஸ்டிஸ் கட்சியை தேசியமாக்க நான் முயற்சி செய்யப் போகிறேன்.

## பாபநாசம் மில். வேலை நிறுத்தம்

பாபநாசம் மில்வேலை நிறுத்தம் இன்னும் அமைதியாக நடந்து வருகிறது. வேலைக்குத் திரும்பும்படியாகத் தொழிலாளர்களைப் பல விதத்திலும் முதலாளிகள் தூண்டி வருகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. ஆனால் தொழிலாளர்கள் தங்கள் குறைகள் நீக்கப் படும்வரை, வேலைக்குத் திரும்புவதில்லையென உறுதியுடனிருக்கின்றார்கள்.

சென்ற புதனன்று பாபநாசத்தில் நடைபெற்ற கூட்டத்தில் ஸ்ரீமான் வரதராஜுலு நாயுடு தலைமைவகித்துப் பேசுகையில் வேலை நிறுத்தத் தொழிலாளர்களின் முக்கிய குறைகளை முதலாளிகள் நீக்க உடன்பட்டால் இப்பொழுதே அவர்கள்வேலைக்குத்திரும்பத் தயாராயிருப்பதாகவும் பின்னர் தாம் டிப்டி கலெட்டரைப் பேட்டிக் கண்டு பேசியதில், அவர் தொழிலாளர்கள் அமைதியாக வேலை நிறுத்தத்தை நடத்திவருவது குறித்து சந்தோஷப் படுவதாகவும், விரைவில் தொழிலாளர்களும், முதலாளிகளும் ஒருவித சமரஸ முடிவுக்கு வருவார்களென்று நம்புவதாகவும், இந்த விவகாரத்தில் தற்போது தலையிட முடியாத நிலையில் இருப்பதாகக் கூறியதாகவும் கூறினார். பின்னர் ஸ்ரீமான் நாயுடு இரகசியப்போலீஸார், தொழிலாளருக்கு விரோதமாகப் புரிந்துவரும் சில செய்கைகளைக் குறிப்பிட்டுத் தொழிலாளர்களை எச்சரிக்கையாயிருக்கும்படி கூறினார்.

மில் தலைமை காரியாலயத்திலுள்ள இரண்டு கணக்காளர்கள் வேலையினின்றும் நீக்கப்பட்டு விட்டனர் என்று தெரிகிறது. ஒருவர் வேலை நிறுத்தக் கூட்டங்களுக்குச் சென்றதற்காகவும், மற்றொருவர் புதிதாக ஸ்தாபிக்கப்பட்ட தொழிலாளர் சங்கக் காரியதரிசியின் மைத்துனர் என்னும் காரணத்திற்காகவும் வேலையினின்றும் நீக்கப்பட்டனராம். தொழிலாளர் சச்சரவு சட்டப்படி ஒரு விசாரணைக் கமிட்டியை நியமிக்கும்படி அரசாங்கத்துக்கு தொழிலாளர் சார்பாக ஒரு மனு அனுப்பப்பட்டிருக்கிறது. தொழிலாளர் சமிஷனரின் வருகையைத் தொழிலாளர்கள் ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். ஓர் ஒழுங்கான முடிவுக்கு வருவதற்காக விசாரணைக் கமிட்டி நியமிக்கப்படும் வரை வேலை நிறுத்தத்தை உறுதியுடன் நடத்திவரத் தொழிலாளர்கள் தீர்மானித்து விட்டார்கள்.

### போலீஸாரின் தலையீடு

பாபநாசம்மில் வேலை நிறுத்தத் தொழிலாளர்களுள் ஒருவரான ஸ்ரீ சடையப்ப பிள்ளை என்பார் வேலைநிறுத்தம் சம்பந்தமாக அம்பாசமுத்திரம் சப்மாஜிஸ்திரேட் கோர்ட்டில் ஒரு பிராது கொடுத்திருக்கிறார். அதில் அவர் 22-2-30ல் மில் மானேஜிங் ஏஜண்டான கருப்பசக்கோன் என்பாரும், ஹெட் கான்ஸ்டேபிள் சக்கர நாராயணக்கோன் என்பாரும் வேலைக்குத் திரும்பும்படி தம்மிடம் கூறியதாகவும், அதற்கு மறுக்கவே, தம்மைத் தாக்கிக் காயப்படுத்தியதாகவும் குறிப்பிட்டிருக்கிறார். தொழிலாளர் சங்கத்தலைவரான ஸ்ரீமான் எஸ். ஆர். வரதராஜுலுநாயுடு போலீஸார், தொழிலாளர்விஷயத்தில் அநாவசியமாகத் தலையிடுவதாகவும், முக்கியமாக ஹெட் கான்ஸ்டேபிள் சக்கர நாராயணக்கோன் செய்கையைக் குறிப்பிட்டு அவரைப் பிரத்தியேகமாக விசாரணை செய்யும்படியாகவும் ஜில்லா மாஜிஸ்திரேட்டிடம் ஒரு பிராது கொடுத்திருக்கிறார். அத்துடன் அவர்போலீஸ் சூப்பிரண்டெண்டான ஸ்ரீஜே. எம். கிரீன் என்பாரிடத்திலும் மேலே குறிப்பிட்டபடி பிராது கொடுத்திருக்கிறார். ஸ்ரீமான் எஸ். ஆர். வரதராஜுலு நாயுடு விட்லிகமிஷன் முன்னர் சாட்சியங்கூற 24-2-30-ல் மதுரைக்குச் சென்றார். அவரைப் பேட்டிக்கண்டு பேசியதில், தொழிலாளர்கள் உறுதியுடனிருப்பதாகவும், போலீஸ் உத்தியோகஸ்தர்கள் இதில் தலையிடுவதை மேலதிகாரிகளிடம் அறிவிக்கப் போவதாகவும் கூறினார் என்று ஒரு பத்திரிகை நிருபர் எழுதுகிறார்.

---

ஸ்ரீகமாண்டர் கேன் வோர்த்தியின் எச்சரிக்கை:— பிரிட்டிஷ் தொழிற்கட்சி பிரபல அங்கத்தினரும், அண்மையில் இந்தியாவில் சுற்றுப்பிரயாணஞ் செய்து விட்டு இங்கிலாந்து திரும்பிய வருமான கமாண்டர் கேன் வொர்த்தி, இந்திய நிலைமை குறித்து ஒரு பிரிட்டிஷ் பத்திரிகையில்எழுதுகையில், இந்தியாவில்தேசிய உணர்ச்சிஅதிகரித்துவருகிறதென்றும், பூரண பொறுப்பாட்சி கொடுத்துவிடவேண்டியதுஇன்றியமையாததென, நிதானபுத்தியுடைய பிரிட்டிஷாரும் இந்தியரும் முடிவுசெய்து விட்டனரென்றும் இதற்குப்பதிலாக அடக்கு முறையை உபயோகிக்கலாமானாலும், அது கொஞ்சகாலத்திற்கே வெற்றியளிக்குமென்றும், அதனால் சுயேச்சைக்கட்சி பலமடையுமென்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

## உலகக் காட்சி

### கல்வியும் காதலும்

அசான்சால் என்ற வங்காள மாகாணத்திலுள்ள ஓர் ஊரில் கேதார்நாத் என்ற ஒருவர் வசித்துக்கொண்டிருந்தார். அந்த ஊரில் ஒரு பள்ளிக்கூடம் உண்டு. அதில் கேதார் இங்கிலீஷ் கற்பிக்கும் ஓர் ஆசிரியராயிருந்தார். அந்த ஊரில் சாந்தாசிங் என்ற ஒருவர் பல சரக்குக்கடை ஒன்று வைத்துக் கொண்டிருந்தார். இவருக்கு சாந்தி என்ற ஒரு சகோதரி உண்டு. அந்தப் பெண், கேதார் நாத் ஆசிரியராயிருந்த பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தாள். அச்சமயத்தில் சாந்திக்கும் கேதார் நாத்துக்கும் காதல் உண்டாயிற்று. இருவருக்கும் காதற் கடிதங்களின் போக்கு வரவு நடைபெற்றன. 1929-ம் ஆண்டு ஜனவரி மாதம் பத்தொன்பதாந் தேதி, ஒரு வாடகை மோட்டார் வண்டியை வரவழைத்து, அதில் ஏறிச் செல்லத் தயாராயிருக்க வேண்டுமென்று கேதார் நாத், சாந்திக்குச் சொல்லி வைத்திருந்தார். அப்படியே, இருவரும் ஒண்டால் ஸ்டேஷனுக்குச் சென்று அங்கு பிளாட்பாரத்தில் உட்கார்ந்திருந்தனர். அப்பொழுது போலீசார், சந்தேகத்தின் பேரில் இருவரையும் கைது செய்தனர். சாந்தியின் தாயார், தன் மகள் காணாது போனமைபற்றி எங்கும் விசாரித்துவர, கடைசியில் தன் பெண்ணும் கேதார் நாத்தும் ஒண்டால் போலீஸ் ஸ்டேஷனில் இருந்ததாகத் தெரியவந்தது. பிறகு சாந்தியின் தாயார், தன் மகள் தன் அநுமதி பெற்றே கேதார் நாத்துடன் சென்றாளென்றும், ஆகலின் அவர்கள் மீது தொடரப்பட்டுள்ள வழக்கை ரத்துசெய்துவிட வேண்டுமென்றும் விண்ணப்பம் செய்து கொண்டாள். செஷன்ஸ் கோர்டில், இந்த வழக்கு விசாரணைக்கு வந்தபோது, தன்னைப் பல வந்தப்படுத்தி மேற்கண்ட விண்ணப்பம் தன்னிடத்திலிருந்து பெறப்பட்டதென்று சாந்தியின் தாயார் கூறினார். கடைசியில் ஹைகோர்டார் கேதார் நாத்தை விடுதலை செய்து விட்டனர்.

* * *

### படித்த ஓர் இளைஞரின் செயல்

லாகூரிலுள்ள ஒரு கல்லூரியில் பி. ஏ. சீனியர் வகுப்பில் படிக்கும் அமர்தாஸ் என்ற தனது கணவர் மீது ஸ்ரீமதி ராஜகுமாரி என்னும் பத்தொன்பது வயதுள்ள ஒரு ஸ்திரீ, தன்னை வைத்துப் பாதுகாக்கவேண்டுமென்ற ஒரு வழக்குத் தொடுத்திருக்கிறாள். லாகூர் நகர மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஸ்ரீமதி ராஜகுமாரி அளித்துள்ள வாக்கு மூலம் வருமாறு:—

நான் ஒரு கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவள். நான் எதிரியை 1926-ம் வருஷம் அக்டோபர் மாதம் பன்னிரண்டாந் தேதி விவாகஞ் செய்து கொண்டேன். என் விவாகத்திற்குப் பிறகு இரண்டு வருஷம் வரை, நான் என் மாமனார் வீட்டில் என் கணவனுடன் வசித்துக் கொண்டிருந்தேன். அந்தக் காலத்தில், என் பெற்றோர்கள் எனக்குப் பணம் ஆடை, நகை முதலியயாவும் அளித்துவந்தார்கள். ஆனால் இவைகளையெல்லாம் என் மாமனாரே பெற்று வைத்துக்கொண்டு வந்தார். இரண்டு வருஷங்கள் கழித்த பிறகு என் மாமனார், என் மாமியார், என் கணவன் ஆகிய அனைவரும் என்னைக் கொடுமையாக நடத்தத்தலைப்பட்டார்கள். அற்ப காரணங்களுக்கெல்லாம் நான் என் பெற்றோர்கள் வீட்டுக்கு அனுப்பப்பட்டேன். அடிக்கடி என் கணவர், என் பெற்றோர்களைப் பணங்கேட்டுத் தொந்தரவு செய்து வந்தார். இங்ஙனம் கொடுமையாக நடத்தப்பட்டதன் பயனாக நான் நோயில் விழுந்தேன். இதனால், நான் க்ஷய ரோகத்தினால் அவஸ்தைப்படுகிறேனென்று சொல்லி என்னை என் பெற்றோர்கள் வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள். என் பெற்றோர்கள், என்னைப் பல வைத்தியர்களிடம் காண்பித்ததில் எனக்கு எவ்வித நோயும் இல்லையென்று கூறுகிறார்கள். நான் நோயாகப்படுத்துக் கொண்டதைக் காரணமாகக் கொண்டு என் கணவர், வேறொரு பெண்ணை இரண்டாந் தாரமாக விவாகஞ் செய்து கொண்டார். என்னுடைய உடமைகளையெல்லாம் அவர் எடுத்துக் கொண்டதுமன்றி, என்னை வைத்துக் காப்பாற்றவும் அவர் மறுக்கிறார்.

---

மணிக்கு அறுபது மைல் வீதம் பர்லினுக்கும் ஹாம்பர்க்குக்கும் போகும் ரெயில் வண்டியில்செல்லும் பிரயாணிகள், தேசத்தின் எந்தப்பாகத்திலும் தங்கள் நண்பர்களுடன்பேசுவதற்கு அநுகூலமாக, அந்த ரெயில் வண்டியிலேயே டெலிபோன் வசதிகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றனவாம்.

கொரியா தேசத்தில் விவாக தினத்தன்று மணமகன் உள்பட எவருடனும் மணமகள் பேசக்கூடாதாம்.

* * *

இங்கிலாந்துக்கும் தென்னாப்பிரிக்காவுக்கும் சமீபத்தில் விளையாட்டுப் பந்தயம் நடைபெற்றதன் பயனாக, இங்கிலாந்துக்கு எண்ணாயிரம் பவுன் நிகரலாபம் கிடைத்ததாம்.

* * *

சாண்ட் ஹர்ஸ்டிலுள்ள ராயல் இராணுவக் கல்லூரியில் 490 மாணவர்கள் படிக்கிறார்கள். இவர்களை மேற்பார்வை செய்ய 304 சிவிலியன் உத்தியோகஸ்தர்கள் இருக்கிறார்கள்.

* * *

இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் டெலிபோன் வசதிகள் சமீபத்தில் ஏற்படுத்த பிரிட்டிஷ் தபால் அதிகாரிகள் முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள்.

* * *

இப்பொழுது காலிபோர்னியாவில் இருநூறு அங்குல வடிவுடைய ஒரு பெரிய தூரதிருஷ்டிக்கண்ணாடி புதிதாகச் செய்யப்பட்டு வருகிறது. இதுவே உலகத்திலுள்ள தூரதிருஷ்டிக் கண்ணாடிகளுள் மிகப் பெரியதென்று சொல்லப்படுகிறது.

இங்கிலாந்தில், இராஜ குடும்பத்தின் செலவுக்காக வருஷத்தில், ஐந்து லட்சத்து எழுபத்தாறாயிரம் பவுன் அளிக்கப்படுகிறது.

* * *

மத்தியான வேளையில், சந்திரனின் உஷ்ணம் கொதிக்கிற நீரைவிட அதிக உஷ்ணமாயிருக்கும் என்று சொல்லப்படுகிறது.

* * *

ஜேபியில் உருளைக்கிழங்கைப் போட்டுக் கொண்டிருந்தால் முடக்குவாத நோய் நீங்கி விடுமென்ற நம்பிக்கை இங்கிலாந்தில் இருக்கிறது.

* * *

டக்ளாஸ் ஆர். ஹில் என்பார் உலக முழுவதையும் முப்பத்து மூன்று வாரத்தில் ஒரு மோடார் சைகிளில் சுற்றிவந்தார். இவர் மொத்தம் இருபத்து மூவாயிரம் மைல் சுற்றி வந்தாரென்று சொல்லப்படுகிறது. இவருக்கு இதனால் ஆயிரம் பவுன் செலவு ஏற்பட்டது.

* * *

பேசும் சினிமாக்களில் நடிக்கும் நடிகர்கள் மைக்ரோபோன் என்ற சிறு கருவியைத் தேகத்தில் அணிந்துகொண்டு நடிக்கிறார்களென்றும் இதனால் அதிக சத்தமுள்ள இடங்களிலும் அச்சத்தங்களினால் பாதிக்கப்படாமல் நடிகர்கள் நடிக்க முடிகிறதென்றும் கூறப்படுகின்றன.





இங்கிலாந்தில் மொத்தம் இருநூறு இந்திய டாக்டர்கள் இருக்கின்றார்கள். இவர்களுள், நூறு பேர் லண்டன் நகரத்திலேயே வசிக்கின்றனர்.

o o o

சென்ற வாரத்தில், அஸ்ஸாம் வங்காள ரயில்வேயைச் சேர்ந்த ரயில் தொடர் ஒன்றில், கார்டு வண்டியிலிருந்த பணப்பைகள் காணமற் போயினவாம்.

o o o

இத்தாலியின் பிரதம மந்திரியின் 'புதல்வி எட்டாவுக்கும், போப்பிடம் இத்தாலிய இராஜ தூதராயிருக்கும் வியானோ பிரபுவுக்கும் திருமணம் நடைபெறும்.

o o o

சென்ற வாரத்தில் கல்கத்தா ஜனரல் தபாலாபீஸில் இரவில் கள்வர் புகுந்து பல இன்ஷ்யூரன்ஸ் பார்ஸல்களைக் களவாடிச் சென்றதாக ஒரு செய்தி கூறுகிறது.

o o o

கவிஞர்ரவீந்திரநாததாகூர்,தம் தேகசௌக்கியத்தை முன்னிட்டு இம்மாதம் இங்கிலாந்துக்குச் சென்று, பின் ஐரோப்பாவில் சுற்றுப்பிரயாணஞ் செய்வாரெனத் தெரிகிறது.

o o o

சென்ற வாரம் கிளாஸ் கோவுக்குச் சமீபத்தில் ருதர் கிளென் என்னுமிடத்தில் இரண்டு ரயில் வண்டிகள் மோதிக் கொண்டதனால் 73 பேருக்குக் காய மேற்பட்டுள்ளது.

o o o

23-2-30-ல் வேலூரில் நடைபெறுமென அறிவிக்கப் பட்டிருந்த தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின்கூட்டம் 2-3-30-க்கு ஒத்திவைக்கப்பட்டது கூட்டம் அன்றுமாலை 2 மணிக்கு நடைபெறும்.

o o o

சென்னை நகரசபை 'பார்க்'குகளில் ரேடியோ மூலம் சங்கீதக் கச்சேரி நடத்த ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. அடுத்த ஏப்ரல் முதல் ரேடியோ மூலம் கச்சேரிகள் நடைபெறும்.

o o o

உலகத்தில் மிகப் பெரிய தென மதிக்கப்படும் பிரிட்டிஷ் கைத்தொழிற்காட்சி ஒன்று இப்பொழுது இருபிரிவுகளாக ஒன்று பர்மிங்காமிலும், மற்றொன்று லண்டனிலும் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

o o o

இங்கிலாந்தில் சென்ற வாரம் மோட்டாரில் 29 பேர் மரண மடைந்ததாகவும், சென்ற 25 வாரங்களில் 946 பேர் மரணமடைந்ததாகவும், 1508 பேர் காயமடைந்ததாகவும் லண்டன் பத்திரிகை ஒன்று கூறுகிறது.

o o o

ஐக்ய மாகாணசட்டசபையில் டேராடூன் ஜில்லா பிரதிநிதியாக இருந்த ஸ்ரீ தாகூர் மஞ்சித்சிங், சட்டசபை பகிஷ்காரத்தை ஒப்புக்கொள்ளாத போதிலும், காங்கிரஸ் கட்டளைக் கிணங்கித் தம் ராஜிநாமாவைக் கவர்னருக்கு அனுப்பி விட்டதாக அறிவிக்கிறார்.

o o o

பாளையம்பட்டி யூனியன் போர்டு தலைவர் திரு. சொக்கப்ப ரெட்டியார் அவர்கள் தமது சேர்மன் பதவியை இராஜிநாமா செய்ததை முன்னிட்டு திரு. அளகப்பஞ் செட்டியாரவர்கள் போட்டியின்றி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

இந்தியச் சட்டசபையிலுள்ள காங்கரஸ் கட்சி அங்கத்தினராயிருந்த திவான் சமன்லால், மௌல்வீ ஷபீதாவூதி, மௌலானா சையத்முர்த்தஜா,ஜனாப் பருக்கி முதலியவருள்ளிட்டபன்னிருவர்அடங்கிய, சட்டசபை சுயாஜ்யக் கட்சி' என ஒன்று ஏற்படுத்தப் பட்டிருக்கிறது.

o o o

மீரத் சதியாலோசனை வழக்கு எதிரிகள் எல்லோரும் மீரத் அடிஷனல் செஷன்ஸ் நீதிபதி மூலம் மாகாண அரசாங்கத்திற்குத் தங்களுடைய குறைகளையும், அசௌகரியங்களையும் குறிப்பிட்டு, அவைகளை நீக்க வேண்டுமெனக் கோரும் ஒரு விண்ணப்பம் அனுப்பியிருப்பதாகத் தெரிகிறது.

o o o

குன்னூரில், ஒரு மோட்டார்காரை வழிப்பறிசெய்ததுடன் அதன் சொந்தக்காரரைத் தாக்கியதாகப் போலீஸார் இரண்டாவது வங்காஷயர் பசிலியர் படையைச் சேர்ந்த நான்கு சோல்ஜர்களைக்கைதுசெய்துகாவலில் வைத்திருக்கின்றனர். விசாரணை 24-2-30ல் நடைபெறும்.

o o o

சமீபத்தில் கோயமுத்தூரிலிருந்து பாலக்காட்டுக்கும், பாலக்காட்டி லிருந்து கோயமுத்தூருக்கும் சென்று கொண்டிருந்த இரண்டு மோட்டார் பஸ்கள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டதில், எட்டுப் பேர் மாணமடைந்தனர். ஒரு கண்டக்டரின் தலை துண்டிக்கப்பட்டிருந்தது.

o o o

பிரிட்டிஷ் சுயேச்சைத தொழில்கட்சியினின்று ஸ்ரீமான் ராம்ஸே மாக்டொனால்டு விலகி விட்டார். சுயேச்சைத் தொழில் கட்சித் தலைவர்களின் தலைமையில் தீவிர தொழில் கட்சியினர் அரசாங்கத்தைத் தாக்கி வருவதன் பயனாக ஸ்ரீமாக் டொனால்டு விலகிக் கொண்டாரெனக் கூறப்படுகிறது.

## கலம்பகம்

லாகூர் கல்லூரி ஒன்றில் வெடிகுண்டு தயாரிக்க உபயோகமாகும் சில ரசாயனச் சாமான்கள் களவுபோனது சம்பந்தமாகப் போலீஸார் 19-2-30-ல் ஆறு இளைஞர்களைக் கைது செய்திருக்கிறார்கள். நகரிலுள்ள எல்லாக் கல்லூரிகளிலும் பள்ளிக்கூடங்களிலும் போலீஸ் பாதுகாப்பு ஏற்படுத்தப் பட்டிருக்கிறது.

o o o

இங்கிலாந்தில் அபாயகரமாக மோடார்வண்டியை ஓட்டுபவருக்கு அதிக தண்டனை ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. வாடகை வண்டி செலுத்துபவர்கள் 21-வயதுக்குக்குறைந்தவர்களாகவும்,சொந்த வண்டி செலுத்துபவர்கள் 16-வயதுக்குக் குறைந்தவர்களாகவும் இருத்தல் கூடாதெனச் சட்டம் இயற்றப்பட்டிருக்கிறது.

o o o

மெக்ஸிகோவில் வில்லா ஆல்டி மோரா என்னும் நகரத்தின் பழைய மேயரும், புதிய மேயரும் சுட்டுக் கொல்லப்பட்டனர். புதிய மேயர் பதவி ஏற்பதை முன்னிட்டு அந்நகரில் மிகவும் அழகிய மாதொருத்தி நடத்திய விருந்தின் போது, யாரோ ஒருவர் மேற்கூறிய இருவரையும் சுட்டுவிட்டுத் தப்பிச் சென்றார்.

o o o

கல்கத்தாவில், ஸ்ரீ ஞானாஞ்சன்நியோகி என்னும் பிரபல காங்கிரஸ்காரர், ஆல்பர்ட் மண்டபத்தில் 'புரட்சி வங்காளம்' என்னும் பொருள் குறித்துப் பேசியதற்காக இராஜத்துவேஷக் குற்றஞ் சாட்டப்பட்டு நடைபெற்ற வழக்கில், கல்கத்தா பிரதம மாகாண மாஜிஸ்திரேட் ஆறுமாதம் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

o o o

இங்கிலாந்தில் ஐக்ய ஏகாதிபத்திய கட்சியெனப் புதிய அரசியல் கட்சி ஒன்றை லார்டு பீவர் புரூக் என்பார் ஆரம்பித்து அது சம்பந்தமான ஓர் அறிக்கையை வெளியிட்டுள்ளார். அதில் ஏகாதிபத்தியத்திற்கான முக்கிய கொள்கைகளை நிறைவேற்ற இக்கட்சி ஏற்படுத்தப்பட்டிருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

o o o

லாகூர் சதியாலோசனை வழக்கில் சம்பந்தப்பட்ட எதிரிகள் 17 நாள் உண்ணாவிரதமிருந்த பின்னர் 20-2-30 மாலை உண்ணாவிரதத்தை நிறுத்திக் கொண்டனர். சிறைச்சாலைக் கமிட்டிகளின் சிபார்சுகளின் பேரில் இந்திய அரசாங்கத்தார் செய்த முடிவு அறிக்கையாக வெளியிடப்பட்டதே உண்ணாவிரதம் முடிந்ததற்குக் காரணம்.

o o o

ஸ்ரீமான் சிதம்பர பாரதியார் மீது இ. பி. கோ. 108-வது பிரிவுப்படி மதுரையில் நடைபெற்று வந்த வழக்கில், மதுரை அடிஷனல் ஜில்லா மாஜிஸ்திரேட் 19-2-30-ல் எதிரியை ஜாமீன் கொடுக்கும்படி உத்தரவிட்டார். ஜாமீன் கொடுக்க மறுக்கவே, எதிரிக்கு ஓராண்டு காவல் தண்டனை விதிக்கப்பட்டது. எதிரி திருச்சி சிறைச்சாலைக்கு அனுப்பப்பட்டார்.

o o o

அருப்புக்கோட்டை ஸ்ரீமான் மூசலாளி மு. மு. முத்துச்சாமி நாடார் அவர்கள் ஞாபகச்சின்ன வாசகசாலையின் 9-வது ஆண்டு நிறைவு விழா நாளது மாசித்திங்கள் 6-ம் நாள் (17-2-30) உயர்திரு பி. டி. ராஜன் எம். எல். ஸி. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் அறிஞர் பலர் சொற்பொழிவு நிகழ்த்தினர் என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

காரைக்குடி நலஉரிமைத் தொண்டர் சங்கத்தின் சுக்கில ஹு மாசிமாதம் 5-ந்தேதி கூடிய நிர்வாகக் கூட்டத்தில் முனிசிபாலிடியிலிருந்து சதர் ஸ்டோருக்குத் தொழில்வரி விலக்கியதாக வந்த கடிதம் நிராகரிக்கச் செய்யப்பட்டது என்ற தீர்மானமும், நகர சுகாதாரத்தைப் பற்றி வேறு சில தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன வென்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

o o o

அண்மையில் மைசூரில் இறந்து போன கௌஹர்ஜான் கணவரான மிர்ஜா' கும்பர் அலி என்பார், தம் மனைவியின் சொத்துக்களுக்கெல்லாம் தாமே பாத்தியதை யுடையவரென அறிவித்துள்ளார். பர்மாவிலுள்ள ஒரு மாது, தாமே கௌஹர்ஜான் ஆஸ்திக்கு உரிமை யுடையவரென பாத்தியம் கொண்டாடுகிறார். இது சம்பந்தமான வழக்கு நடைபெற்று வருகிறது.

o o o

திருச்சி ரயில்வே சதியாலோசனைவழக்கில் திருச்சி செஷன்ஸ் நீதிபதி ஸ்ரீமான்கள் முகுந்தலால் சர்க்கார், சிங்காரவேல் செட்டியார்மற்றும் 13 பேர்களுக்கும் ஒவ்வொருவருக்கும் 10 ஆண்டு கடுங்காவல் தண்டனை விதித்திருப்பதை மறுத்து அப்பீல்செய்து கொள்ளப்பட்ட வழக்கு சென்னை ஹைகோர்ட்டில் நடந்துவருகிறது. எதிரிகளின் சார்பாக வாதம் நிகழ்ந்து வருகிறது.

o o o

நீதிஸ்தலத்தை அவமதித்ததாக லாகூரில் வெளியாகும் "மிலாப்" பத்திரிகை ஆசிரியர் மீது கொண்டு வரப்பட்ட வழக்கில், அவருக்கு இருநூறு ரூபாய் அபராதம் விதிக்கப் பட்டது. அபராதம் உடனே செலுத்தப்பட்டது. இ. பி. கோ. 124-வது பிரிவுப்படி அவர்மீது சாட்டப்பட்டிருக்கும் மற்றொரு வழக்கில் லாகூர் அடிஷனல் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் குற்றப்பத்திரிகைவாசித்தார்.

o o o

19,20-2-30ந்தேதிகளில்முறையே கல்கத்தாவிலும், கான்பூரிலும் விட்லி கமிஷன் அங்கத்தினர் விசாரணையை முடித்துக்கொண்டு, 21-2-30ல் ஜெம்ஷட்பூருக்குவந்து, டாடா தொழிற் சாலையைப் பார்வையிட்டனர். இத்தொழிற்சாலையின் பல இலாக்காக்களைச் சேர்ந்த ஊழியர்கள் ஹார்த்தால் அநுஷ்டித்தனர். இவர்கள், கமிஷன் விசாரணை நடத்தும் காம்பவுண்டில் கூடி இடை விடாமல் கூச்சலிட்டுக் கொண்டிருந்தனர்.

o o o

கோயமுத்தூர் தொழிலாளர் சங்கத் தலைவரும், அட்வோகேட்டுமான ஸ்ரீமான் என். எஸ். ராமசாமி ஐயங்கார், ஒரு கொலை வழக்கைக் குறித்து வாதஞ்செய்ய பவானிக்குச் சென்றிருந்தார். அங்கு அவருக்கு, வல்பாரையில் கூடப்போகும் ஆனைமலை தொழிலாளர் கூட்டத்தில் பேசக்கூடாதென்று இ. பு. கோ. 144-வது பிரிவுப்படி கோயமுத்தூர் ஜில்லா மாஜிஸ்திரேட்டால் பிறப்பிக்கப்பட்ட ஒரு தடையுத்தரவு அளிக்கப்பட்டது.

o o o

அண்மையில் கொலை, களவு முதலிய குற்றஞ் சாட்டப்பட்ட இருபத்திரண்டு பேர் சைனாவிலுள்ள பீகிங் நகரின் பல வீதிகள் வழியே கழுதை மேல் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டனர். பின்னர் வரிசையாக நிறுத்திவைக்கப்பட்டு அரசாங்கச் சிப்பாய்களால் சுட்டுக் கொல்லப்பட்டனர். இங்ஙனம்சுடப்பட்டவர்களுள் இருவர் பெண்பாலர்கள். பொதுஜனங்கள்முன்னிலையில் இத்தண்டனை நிறைவேற்றப்பட்டன.

o o o

இராமநாதபுரம்ஜில்லா நல்லூரில் ஸ்ரீராமாநுஜ இலவசவாசகசாலை 11-2-30-ந்தேதியில் விருதுநகர் ரேஞ்சு ம-ா-ா-ஸ்ரீ ஸ்கூல் டிப்டி இன்ஸ்பெக்டரவர்களால் திறக்கப்பட்டு, சிருஷிகன், ஆரோக்ய தீபிகை, சுதேசமித்திரன், நவசக்தி, அமிர்தகுணபோதினி, ஆனந்தபோதினி, ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ விஜயம் முதலிய பத்திரிகைகளும், சஞ்சிகைகளும், புஸ்தகங்களும், சேகரித்து, நன்கு நடைபெற்று வருகிறதென்று காரியதரிசி அறிவிக்கிறார்.

o o o

பிரான்ஸில், ஜனப்பிரதிநிதிச் சபையில் இன்ஷியூரன்ஸ் திட்டம் சம்பந்தமான ஒரு பிரிவில் மாறுதல் செய்யவேண்டுமென்னும் அரசாங்கப் பிரேரணை தோல்வியடைந்ததால், முதல் மந்திரியான ஸ்ரீடார் டியூவும் மற்ற ஐந்து மந்திரிகளும் இராஜிநாமாசெய்து விட்டார்கள். மீண்டும் ஸ்ரீ சௌடெம்பஸ் தலைமையில் மந்திரி சபை அமைக்கப்பட்டது ஸ்ரீ பிரயண்ட் அந்நியநாட்டு மந்திரியாக நியமிக்கப்பட்டிருக்கிறார். ஸ்ரீடார் டியூ சேர்க்கப்பட்டிருக்கிறார்.

o o o

மசூலிப்பட்டணத்திற்குச் சென்னைக் கவர்னர் சென்றிருந்தபோது, கறுப்புக் கொடிகளுடன் ஊர்வலம் நடத்தியதாகச் சிலதொண்டர்கள்மீது நடைபெற்றுவரும் வழக்கில், பிராஸிக்யூஷன் தரப்பு சாட்சிகளின் குறுக்கு விசாரணை 20-2-30-ல் முடிந்தது. நான்கு எதிரிகளைத் தவிர, மற்ற எதிரிகள் கூடிய விரைவில் ஸ்டேட்மெண்டு கொடுப்பதாயும், ஆனால் எதிர் வழக்காடப் போவதில்லையென்றும் கூறினார்கள். எதிர் தரப்பு சாட்சி விசாரணை 27-2-30-ல் நடக்கும் என்று அறிவிக்கப்பட்டது.

o o o

தூத்துக்குடி "சண்முக சச்சிதானந்த சபையின்" (உண்மையறிவின்பக் கழகத்தின்) மூன்றாம் ஆண்டு நிறைவு விழா, இந்நகர் மேலவூர் வடக்குரதவீதி திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் மடாலயத்துக்குக் கீழ்பக்கம் அமைத்துள்ள கொட்டகையில், சுக்கிலஹு மாசிமீ 18, 19-ஆம் (1, 2-3-30) நாட்களில் நடைபெறும். அவ்வமயம் இராமநாதபுரம் இளைய மகாராஜா உயர்திரு. பி. ராஜாராம் பாண்டியன் அவர்கள் அவைத் தலைமை வகிப்பார்கள் என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

சென்னையில், பாலுசாமி செட்டி, கதிர்வேலு, சுப்பையா செட்டி ஆகிய மூவரும், பார்வதியம்மாள் என்னும் ஸ்திரீக்கு மயக்க மருந்து கொடுத்து, அவரிடமிருந்த ரூ 700 பெறுமான மூன்று நகைகளைக் களவாடியதாகக் குற்றஞ் சாட்டப்பட்டு ஜார்ஜ்டவுன் போலீஸ் கோர்ட்டில் நடைபெற்று வந்த வழக்கில், மாஜிஸ்திரேட் 21-2-30ல் முதல் எதிரிக்கு ஓராண்டு சிறைவாசத் தண்டனையும் ரூ 300 அபராதமும், மற்ற இருவருக்கு ஓராண்டு சிறைவாசத் தண்டனையும் விதித்தார். அபராதத் தொகைவசூலானால்,வாதிக்கு ரூ 275 கொடுக்கும்படி உத்தரவிடப்பட்டது.

o o o

திருச்சி பாலக்கரை ரயில் கேட்டிற்கு அருகில் சென்ற ஆண்டு ஜூலைமாதம் 25-ந்தேதி ஒரு பஸ்ஸும் எஞ்ஜினும் மோதுண்டன. இதில் இறந்தவர்களின் வாரிசுதாரர்களான ஸ்ரீமதி பாலாம்பாள், ஸ்ரீமான்கள் அகத்தீஸ்வர ஐயர், கிருஷ்ணசாமி ஐயர் இவர்கள் முறையே, ரூ. 14150, 8050, 3040 ரூபா நஷ்டஈடு கொடுக்க வேண்டுமெனத் தென்னிந்திய ரெயில்வே மீது திருச்சி அடிஷனல் சப்ஜட்ஜ்முன் வழக்குத் தொடுத்திருந்தனர். இதற்குக் கம்பெனியார் வாதிகள் மூவருக்கும் பத்தாயிரம் ரூபா கொடுக்கச் சம்மதிக்கவே, வாதிகள் வழக்குகளை வாபீஸ் வாங்கிக் கொண்டார்கள். பிறகு நீதிபதி மூன்று வாதிகளுக்கும் அவரவர்களது நிலைக்குத் தகுந்தபடி அத்தொகையைப் பிரித்துக் கொடுத்தார்.

o o o

ஆண்வேடம் பூண்டு திரிந்த பெண் :— தேகக்கட்டும், உயரமும், கறுப்பு நிறமும்வாய்ந்த சுமார் 18 வயதுள்ள சாரதா தாஸி என்னும்பெண் 21-2-30ல் அலிப்பூர் டிப்டிமாஜிஸ்திரேட்முன்பு நிறுத்தப்பட்டாள். அதுபோது அவள் ஆண் உடைதரித்திருந்தாள். இம்மாது பகலில் குடும்ப ஸ்திரீயாகவும், இரவில் திருடனாகவும் இருப்பதாகக் கூறப்பட்டது. அலிப்பூரிலும், அதன் சுற்றுப் பக்கங்களிலும் பல களவுகள் நடந்திருக்கின்றன. போலீஸார் பெண்ணைக் களவாடிய பொருள்களுடன் கைதுசெய்தனர்.

### மருந்தால் போகும் பணம்

நாம் உபயோகப்படுத்தும் மருந்துகளில் பல வெளி நாட்டிலே செய்யப்பட்டவை. இவைகளைச் செய்ய வேண்டிய சாக்குகள் இந்தியாவிலேயே கிடைக்கக் கூடியவை. இதைப் பற்றிச் சென்னை 'மெடிக்கல் காலேஜ் மேகசினி'ல் திரு. வி. ஈஸ்வரய்யா பி. ஏ., எம். பி. பி. எஸ். எழுதுகிறார் :—

பொருளாதார நிலையை உத்தேசித்தாவது நாம் நாட்டு மருந்து செய்வதைப் புதுப்பிக்க வேண்டும். விதியின் கூற்று என்னவென்றால் நம் நாட்டிலிருந்து சரக்குகளை வெளி தேசத்திற்கு அனுப்புகிறோம். அங்கே அவைகளிலிருந்து மருந்துசெய்து நம் நாட்டிற்கே திருப்பி அனுப்பப்படுகின்றன; ஆனால் விலை மட்டும் ஒன்றுக்கு அநேகம் அதிகமாய்விடுகிறது. கீழே கொடுக்கப்பட்டிருக்கும் புள்ளி விவரங்கள் இதை நன்கு தெரிவிக்கும்.

மருந்து மூலிகைகள் விலை மதிப்பு

| வருஷம் | ஏற்றுமதி ரு. | இறக்குமதி ரு. |
|---|---|---|
| 1919-20 | 45,46,980 | 1,82,49,640 |
| 1920-21 | 48,32,390 | 2,11,28,270 |
| 1921-22 | 35,13,048 | 1,58,37,225 |
| 1922-23 | 22,89,352 | 1,66,08,551 |
| 1923-24 | 21,97,624 | 1,81,32,945 |
| சராசரி | 36,15,878 | 179,91,326. |

ஒருபவுண்ட் தேயிலைத் தூள் 6 அணா வீதம் தென் அமெரிக்காவிற்கும் ஐரோப்பாவிற்கும் நாம் அனுப்புகிறோம். ஆனால் இந்த சரக்கிலிருந்து 'கேபின்' எடுத்து 452 ரூபாய்க்கு நமக்கு மறுபடியும் விற்கிறார்கள்! இதேமாதிரி எட்டிக்கொட்டை, ஊமத்தன் கொட்டை, முத்து முதலியவைகளின் நிலையும்.

### மந்திரக்காரனின் தந்திரம்

அலிபூர் சப் டிவிஷனல் ஆபீசர் முன்னிலையில் விநோதமான ஒரு வழக்கு விசாரணைக்கு வந்திருக்கிறது. இந்த வழக்கில் வாதியாயுள்ளவர், சுமார் ஒரு வருஷகாலமாகப் பலவித வியாதிகளால் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். இதனால் இவருடைய தேகநிலையும் மனோநிலையும் சரியாயில்லை. அச்சமயத்தில் எதிரியான ஜோகேஷ் என்பார், வாதிக்குப் பேய்பிடித்திருக்கிறதென்றும், அதனாலேயே அவருடைய தேகமும் மனமும் குன்றியிருக்கின்றன வென்றும், தான் மந்திரவாதியென்றும் தனக்கு வாதியைக் குணப்படுத்தச் சக்தி இருக்கிறதென்றும் கூறினார். இதனால், இவருக்கும் வாதியின் குடும்பத்தினருக்கும் சிநேகம் ஏற்பட்டது. கடைசியில் எதிரி வாதியின் மனைவி மேல் கண் வைத்து, அவளுடனும் வாதியின் பிற சுற்றத்தாருடனும் சேர்ந்துகொண்டு, வாதியினால் சம்பாதித்து வைக்கப்பட்ட சுமார் மூவாயிரம் ரூபா பெறுமான சொத்துக்களுடன் வெளியேறிச் சென்றுவிட்டான். தவிர, வாதியின் மனைவியும் அவனுடன் சென்று விட்டாள். இதனால் வாதி மிகவும் கஷ்டமான நிலையில் இருப்பதாகப்பிராதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மாஜிஸ்ட்ரேட், எதிரியான ஜோகேஷுக்கு ஒரு வாரண்டும் வாதியின் மனைவியைக்கோர்டில் ஆஜர் செய்யுமாறு ஒரு பரிசோதனை வாரண்டும் பிறப்பித்திருக்கிறார்.



தாமார்க்குங் குடியல்லோம் சமனையஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவா ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1930ஞு பிப்ரவரிமீ 26உ

## தேர்தல்

லாகூர் காங்கரஸ் தீர்மானத்தை யொட்டிக் காங்கரஸ் பெயரால் சட்டசபை நண்ணியவருள் பலர் தத்தம் பீடங்களினின்றும் விலகினர். அப்பீடங்களை நிரப்புதற்கு இடைத்தேர்தல்கள் சில விடங்களில் நடந்தேறின; சில விடங்களில் நடக்கப்போகின்றன. இவ்விடைத் தேர்தலில் காங்கரஸ்காரர்கள் பெரிதும் பகிஷ்காரப் பிரசாரஞ் செய்தார்களில்லை. காங்கரஸ்காரர்கள் அம்முயற்சியில் தலைப்படா தொழியினும், தேசம் தனது கடனை ஆற்றுமற் போகவில்லை.

சிலர் எதிர்ப்பின்றிச் சட்டசபை நண்ணினர். சிலர் எதிர்ப்புடன் தேர்தலில் தலைப்பட்டனர். எதிர்ப்பின்றிச் சட்டசபை நண்ணியவருள் சிலரது பெயர்கள் கூட வாக்காளர்க்குத் தெரிந்திராதென்பதை ஈண்டுச் சொல்லவேண்டுவதில்லை. இவர்களும் "பிரதிநிதிகள்" என்றுசட்டசபையில் நடனாற்றப்போகிறார்கள்!

எதிர்ப்புடன் தேர்தலில் போராடி வெற்றி பெற்றவர்கள் எவ்வளவு வாக்குகள் பெற்றார்கள் என்பதை விளக்கிக் கூற வேண்டுவதில்லை. இப்பொழுது நடைபெற்ற இடைத் தேர்தல்களுள் நமது கவனத்தைப் பெரிதும் ஈர்த்து நின்றது பம்பாய் நகர இந்திய சட்டசபைத் தேர்தலேயாகும். இத்தேர்தலில் வெற்றி பெற்றவர் யாவர்? ஸர் கவாஸ்ஜி ஜிஹாங்கீர் என்பவர். இவர் ஒரு பார்சிகாரர். பம்பாயில் இவ்வகுப்பார் மிகச் செல்வாக்குடையவர்.

இத் தேர்தலில் எத்தனை வாக்காளர்கள் கலந்து கொண்டார்கள் என்பது கவனிக்கத் தக்கது. பெரும் போட்டியுடன் நடைபெற்ற இத்தேர்தலில் நான்கில் ஒரு பங்கு வாக்குகள்கூடப் பதிவாகவில்லை. இதனால் தேசத்தின் நிலை நன்கு புலனாகிறது.

காங்கரஸ் ஆணைப்படி சட்டசபையினின்றும் விலகி மீண்டும் அச்சபையை நோக்க ஒருப்படாத உண்மைக் காங்கரஸ்காரர்களை நாம் வாழ்த்துகிறோம். சட்டசபைசெல்லக் காங்கரஸ் கட்டளை வழங்கும்போது காங்கரஸ் முழக்கஞ் செய்வதும், காங்கரஸ் சட்டசபை பகிஷ்காரக் கட்டளை நல்கும்போது காங்கரஸைக் குறைகூறிச் சட்டசபை நண்ணமுயல்வதும் சிலருடைய "தொண்டுகளாக" இருந்து வருகின்றன.

அதிகாரவர்க்க ஆட்சி முறையில் சட்டசபை நண்ணுவதால் நாட்டுக்கு எவ்வித நலனும் விளையாதெனவும், நலனுக்குப் பதிலாகக் கேடே விளையுமென்றுங் காங்கரஸ் நன்குணர்ந்தே முன்னர்ச் சட்டசபை பகிஷ்காரத்தைப் பணித்தது. அம்முயற்சி வெற்றியளித்துவந்த வேளையில், சிலருக்கு ஒருவித பித்துப் பிடித்தது. அதாவது சட்டசபையைப் பற்றி ஆங்கிருந்து முட்டுக்கட்டை யிட்டு அதிகார வர்க்கத்தின் இயக்கத்தைத் தகைவது என்பது. 'இம்முயற்சியினும் தேசம் அநுபவம் பெறுதல் நலம்' என்று காங்கரஸும் அதற்குத் துணை நின்றது. அப்பொழுது நடைபெற்ற தேர்தலில் காங்கரஸ் சார்பாக நின்ற சுயராஜ்யக் கட்சிக்குப் பெரும் வெற்றி விளைந்தது நேயர்கட்குத் தெரியும்.

'முட்டுக்கட்டை; முட்டுக்கட்டை' என்று கூக்குரலிட்டுச் சட்டசபை போந்த பிரதிநிதிகள் சில விடங்களில் ஒழுங்காக நடந்துகொண்டார்கள்; சில விடங்களில் ஒழுங்கினமாக நடந்து கொண்டார்கள். ஒழுங்கீனமாக நடந்தவருள் தலைசிறந்த விளக்கியவர்கள் சென்னைச் சுயராஜ்யக் கட்சிக்காரர்களே யாவர்.

சென்னைச் சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் இரட்டையாட்சியைத் தகர்ப்பதற்குப் பதிலாக அதற்கு ஆக்கந்தேடி வந்தார்கள். இவர்கள் மந்திரிக் கட்சிக்குத் துணை நின்றது உலகறிந்ததொன்று.

காங்கரஸ் பெயரால் சட்டசபை நண்ணியவர்களிற் சிலர் நேரிய முறையிலும் சிலர் கோணிய முறையிலும் நடந்து கொண்டனர். இதன் பயனை விளைந்ததென்ன? ஒத்துழைப்பு வலுப்படலாயிற்று.

சட்டசபை வாயிலாக முட்டுக்கட்டையிடச் சென்ற சுயராஜ்யக் கட்சியால் ஒன்றும்நிகழ்த்த இயலாமற்போயிற்று. அதுகண்ட அக்கட்சித் தலைவரும் மற்றவரும் மீண்டும் பகிஷ்கார முறையைக் கொண்டாலன்றி நாட்டுக்கு உய்வில்லை என்னும் முடிவிற்கு வந்தனர். அம்முடிவே லாகூர் காங்கரசில் சட்டசபை பகிஷ்காரத் தீர்மானமாகப் பரிணமித்தது.

முன்னரெழுந்த பகிஷ்கார உணர்வை இடையில் தகைந்த சுயராஜ்யக் கட்சிக்கு வாய்ப்பு நல்கியதும் நல்லதாயிற்று. இல்லையேல், இடையிடை, சட்டசபை புணர்வு காங்கரஸுக்குள் நடமாடிக் கொண்டிருக்கும். இப்பொழுது சட்டசபைக்குள் புகுந்து ஒன்றுஞ் செய்ய இயலாது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கிவிட்டது. இங்கே மற்றுமோர் உண்மை குறிக்கவும் விரும்புகிறோம். அஃதென்னை?

ஒத்துழையாக் காலத்தில் சட்டசபை நுழைந்த பிற்போக்குக் கட்சிக்காரர் "தேசத்தில் காங்கரஸுக்குச் செல்வாக்கில்லை" என்று கூறிக்கொண்டிருந்தனர். அக்கூற்று, சட்டசபையைப் பற்றக் காங்கரஸ், சுயராஜ்யக் கட்சிக்குத் துணை செய்தபோழ்து பொய்ப்பட்டு விட்டது. ஏறக்குறைய எல்லாச் சட்டசபைகளிலும் காங்கரஸ்காரரே பெரும் பான்மையோராக நுழைந்து தேசத்தில் தமக்குள்ள செல்வாக்கைப் புலப்படுத்தினர். இந்திய சட்டசபையின் ஆதரவைச் சைமன் குழு பெறுமற் போனதை ஈண்டுச் சிறப்பாகக் குறிப்பிடுகிறோம். தேசத்தில் காங்கரஸுக்குள்ள செல்வாக்கை அரசாங்கத்தார் நன்குணர்ந்தனர். இதுவே நாம் குறிக்க விரும்பிய உண்மையாகும்.

தேசம் எப்பொழுதுங் காங்கரஸ் வழி நிற்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால், அதைப் புலப்படுத்த அடிக்கடி காங்கரஸ்காரர் சட்டசபை புகுந்து ஒத்துழைப்பில் இறங்க வேண்டுவது அநாவசியம். காங்கரஸ் தனக்குள்ளசெல்வாக்கை அரசாங்கத்தக்கும், பிற்போக்குக் கட்சிக்கும் விளங்கச்செய்த பின்னர் அது விடுதலைப் போரிலன்றோ இறங்குதல் வேண்டும்? அம்முறைப்படி லாகூர் காங்கரஸ் வழிகாட்டி யிருக்கிறது. இனி, சுய ஆட்சி பெறும்வரை சட்டசபை நண்ணல் கூடாது என்னும் உறுதியில் தேசத்தை நிறுத்தவே காங்கரஸ் முயலல் வேண்டும்.

இடைத் தேர்தலின் விளைவு என்னவாயினும் ஆக. அதைப்பற்றி எவரும் கவலையுற வேண்டுவதில்லை. வரப்போகும் பொதுத் தேர்தல் மீது பெருங் கவலை செலுத்த வேண்டுவது காங்கரஸ்காரர் கடமை. பொதுத் தேர்தலில் வாக்காளரைக் கலந்து கொள்ளாதவாறு அறமுறையில் வினைகள் ஆற்றப்படல் வேண்டும்.

எல்லா வாக்காளரையுங் கட்டுப்படுத்த இயலுமா என்று சிலர் கருதலாம். எல்லாரையுங் கட்டுப்படுத்த எந்நாளிலும் எவராலும் இயலாது. பெரும்பான்மையோரைக் கட்டுப்படுத்தவே காங்கரஸ் நேயர்கள் முயலல்வேண்டும்.

பெரும்பான்மை வாக்குப் பெறாத பிரதிநிதிகள் எத்தகையினரா யிருப்பரென்று சொல்லவும் வேண்டுமோ? அப்பிரதிநிதிகள் கூட்டத்தை இரு கூறாகப் பிரிக்கலாம். ஒன்று அரசியற்றுறையில் பிற்போக்குக் கூட்டமா யிருக்கும்; மற்றொன்று கால தேச வர்த்தமானத்துக்கேற்ற சீர்திருத்தங்களை மறுக்குங் கூட்டமாக நிற்கும். இவ்விரண்டினாலும் நாட்டுக்கு நலன் விளையாதென்பது ஒரு தலை. நாட்டின் விடுதலைக்கும், சீர்திருத்தத்துக்கும் போராடுபவரே இப்பொழுது நாட்டின் சேவைக்குரியராவர்.

காந்தியடிகள் நாட்டின் விடுதலைக்கும் பாடு படுகிறார்; நேரிய சீர்திருத்தத்துக்கும் உழைக்கிறார். இவர் வழி நிற்றலே அறம் அறம் என்று வலியுறுத்துகிறோம். இப்பொழுது காந்தியடிகள் அறப்போர் முன்னணியில் நிற்கிறார். அவர்க்குத் துணைபுரியத் தேசமும் முன்னிற்றல் வேண்டும்.

சட்டசபை பகிஷ்காரம், காந்தியடிகள் தொடங்கியுள்ள அறப்போருக்குப் பெருந் துணை செய்வதாகும். இவ்வுதவி புரியத் தேசம் முன்னணியில் நிற்பதாக. நூற்றுக்கு அறுபது வாக்காளர் தேர்தலில் கலவாமல் நின்றால் போதும்.

ஆங்காங் குள்ள காங்கரஸ்காரர் முயன்றால் நூற்றுக்கு எண்பது பேரைத் தேர்தலிற் கலவாமற் செய்யலாம். இஃது ஆங்காங்குள்ள காங்கரஸ் நிர்வாகிகள் முயற்சியைப் பொறுத்து நிற்கிறது.

நந்தமிழ்நாட்டுக் காங்கரஸ் நிர்வாகம் மகிழ்ச்சி தரக் கூடியதாயில்லை. இப்பொழுது காங்கரஸ் சட்டசபையைப் பகிஷ்கரிக்க ஆணை தந்திருக்கிறது. இவ்வேளையில் மாகாண காங்கரஸ் நிர்வாகம், காங்கரஸ் கட்டளை வழி நிற்பவரிடமிருத்தல் வேண்டும். தற்போது தமிழ்நாட்டுக் காங்கரஸ் நிர்வாகத்தை ஏற்றுள்ளவர்கள், லாகூர் காங்கரஸ் தீர்மான வழி நிற்க உளங் கொண்டு ஊக்கமாக உழைத்தல் வேண்டும்; அல்லது நிர்வாகத்தினின்றும் விலகித் தங்கள் விருப்பப்படி நடத்தல் வேண்டும். இரண்டிலொன்றைப் புரியாது வாளாகிடத்தல் நியாயமாகாது. தற்போதைய தமிழ்நாட்டுக் காங்கரஸ் நிர்வாகிகள் ஒழுங்கு முறைபற்றி நடப்பார்களென்று நம்புகிறோம்.

வரும் பொதுத் தேர்தலுக்குள் பகிஷ்காரப் பிரசாரம் எங்கணும் நன்கு நடைபெற வேண்டு மென்பது நமது கோரிக்கை.

## இடியேறு

### ஒரு நல்ல பாடம்

காங்கிரஸ் சுயராஜ்யக் கட்சியைச் சேர்ந்தவரும், பம்பாய் நகரத் தொகுதியின் சார்பாக இந்தியா சட்டசபையில் அங்கம் பெற்றிருந்தவருமான ஸ்ரீமான் யமுனதாஸ் மேட்டா, லாகூர் காங்கிரஸ் தீர்மானத்தை யொட்டித் தமது பதவியை இராஜீநாமா செய்தார். இதனுடன் இவர் நின்றிருந்தால் சிறப்பாயிருந்திருக்கும். மீண்டும், தனி மனிதர் என்ற முறையில், மேற்படி தொகுதியின் சார்பாகவே, இடைத் தேர்தலில் அபேட்சகராக நின்றார். விளைந்த பயனென்ன? பெருந் தோல்வி. ஸ்ரீ யமுனா தாஸ் மேட்டா, இதற்கு முன் நடைபெற்ற தேர்தலில் காங்கிரஸ் சார்பாக நின்றதனாலேயே வெற்றியடைந்தன ரென்பதும் தனி மனிதர் என்ற முறையில் நின்றிருந்தால் வெற்றி நிகழ்ந்திரா தென்பதும் இதனால் நன்கு புலனாகின்றன. ஸ்ரீ யமுனாதாஸின் தோல்வியானது, காங்கிரஸ் ஆணையை மீறித் தேர்தலுக்குத் தனி மனிதர் என்ற முறையில் நிற்கும் "காங்கிரஸ் வாதிகள்" என்று சொல்லிக் கொள்வோருக்கு ஒரு நல்ல பாடம் கற்பிக்கும் என்று கருதுகிறோம். லாகூர் காங்கிரஸ் தீர்மானம், காங்கிரஸ் அபேட்சகர்களே சட்டசபைகளைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்று கூறுகிறதென்றும், வாக்காளர்களை, வாக்குக் கொடுக்க வேண்டாமென்று தகைய வில்லையென்றும்சிலர், வாக்காளர்களிடம் பிரசாரஞ்செய்து வருகிறாரென்றுசொல்லப்படுகிறது. காங்கிரஸ் தீர்மானங்கள் தேசமக்கள் அனைவரையும் கட்டுப்படுத்தவதாகும். அஃது, ஒரு சமூகத்தாருக்கு, அல்லது ஒரு பிரிவினருக்கு மட்டும் நன்மை பயக்கவேண்டுமென்று நிறைவேற்றப் படவில்லை. இதனை மகாத்மாகாந்தி அடிக்கடி வற்புறுத்தி வந்திருக்கிறார். எனவே காங்கிரசின் சட்டசபை பகிஷ்காரத் தீர்மானம், வாக்காளர்களைக் கட்டுப்படுத்தாது என்ற மயக்குமொழியில் சிக்கிக்கொள்ள வேண்டாமென்று தேசத்தின் மீதும் காங்கிரசின் மீதும் பற்றுக்கொண்ட வாக்காளர்களுக்கு எச்சரிக்கை செய்கிறோம்.

### சிறைச்சாலை விதிகள்

இந்தியாவிலுள்ள சிறைச்சாலைகளில் பலவித சீர்திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென்பதைப்பற்றி இந்தியாவில் நீண்ட காலமாகக் கிளர்ச்சி இருந்து வந்தது. சிறைச்சாலைகளில் சமூகவேற்றுமை பாராட்டப்படுதல், அரசியல் கைதிகள் சாதாரண கைதிகளைப்போல் நடத்தப்படுதல் முதலியவைகளை ஒழிக்கவேண்டு மென்பதே இக்கிளர்ச்சியின் சாரமாகும். இவ் வேற்றுமைகள் ஒழிக்கப்பட வேண்டுமென்ற நோக்கத்துடனேயே, லாகூர் சதியாலோசனை வழக்குச் சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டு விசாரணையிலிருப்போர் உண்ணாநோன்பிருந்தனரென்பது நேயர்களுக்குத் தெரியும். இதனால், இந்தியா அரசாங்கத்தார், சிறைச்சாலைச் சீர்திருத்த சம்பந்தமாக ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர். இந்த அறிக்கை பலர்க்கு திருப்தியளியா தென்பது திண்ணம். பண்டித மாளவியாவும் ஜனப் ஜின்னாவும் இந்த அறிக்கையினால் திருப்தியடையவில்லை யென்றால் நாம் வேறு கூறவேண்டுவதில்லை. இந்தப் புதிய விதிகளின்படி, கைதிகள் ஏ. பி. ஸி. என்ற மூன்று வகுப்பினர்களாகப் பிரிக்கப்படுவார்கள். கைதிகளின் முன்னைவாழ்க்கை நிலையை யொட்டியும், அவர்கள் நிகழ்த்தியுள்ள குற்றங்களின் அளவை யொட்டியும் இந்தப் பாகுபாடு இருக்கும். எனவே, நிறத்தின் காரணமாகவோ, சமூகத்தின் காரணமாகவோ இதுகாறும் காட்டப்பட்டு வந்த வேற்றுமைகள் ஒழியும் என்பது ஒரு விதத்தில் பாராட்டத்தக்கதே. ஆனால், தண்டிக்கப்பட்ட கைதிகள் எந்த வகுப்பில் சேர்க்கப்பட வேண்டுமென்று கூறும் முழு உரிமை, விசாரணை செய்யும் நீதிபதிகளுக்கோ, மாஜிஸ்ட்ரேட்டுகளுக்கோ அளிக்கப்படவில்லை. குறித்த ஒரு வகுப்பில்ஒருகைதியைச்சேர்க்கவேண்டுமென்ற மாஜிஸ்ட்ரேட்டின் ஒவ்வோர் உத்தரவும் மாகாண அரசாங்கத்தினரால் அங்கீகரிக்கப்பட வேண்டுமென்று விதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இஃது அநாவசியமென்று நாம் கருதுகிறோம். மாஜிஸ்ட்ரேட்டினல் குறிக்கப்படும் வகுப்பில் விருப்பமில்லை யென்று தெரிவிக்கும் கூறுகளிலேயே மாகாண அரசாங்கத்தார் தலையிட்டால்போதும். மாகாண அரசாங்கத்தார் சிறைச்சாலைப் பத்திரிகை யொன்றை வெளியிடுவதாகவோ, வெளியிடப் போவதாகவோ இந்தியா அரசாங்கத்து அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. இதில் என்ன செய்திகள் அடங்கியிருக்குமென்பது நமக்குத் தெரியாது. இத்தகைய பத்திரிகை அநாவசியம் என்பது நமது கருத்து. மற்றும், கல்வி ஞானமுள்ள கைதிகளுக்கு, தினசரிப் பத்திரிகை ஏதேனுமொன்று அளிக்கப்படல்வேண்டும். அரசியல் கைதிகள், எந்த வகுப்பில் சேர்க்கப்படுவரென்பதைப் பற்றிய குறிப்பே, இந்தியா அரசாங்க அறிக்கையில் இல்லை.





## காரியக்கூட்டத்தின் தீர்மானம்

### பண்டித ஜவஹரிலால் நேருவின் அறிக்கை

காங்கிரஸ் தலைவராகிய பண்டித ஜவஹரிலால் நேரு தேசத்தாருக்குப் பின்வருஞ்செய்தியை விடுத்திருக்கிறார்:—

"காங்கிரஸ் காரியக் கமிட்டி, தீர்க்காலோசனையின் பேரில் சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்கும்படி அநுமதியளிக்கத் தீர்மானித்திருக்கிறது. இந்தத் தீர்மானம் எளிதாகவோ, சமீபத்திலும் இறுதியிலும் ஏற்படக்கூடிய பலாபலன்களைக் கவனியாமலோ நிறைவேற்றப் படவில்லை. சட்ட மறுப்பானது அஃது எப்படி ஆரம்பிக்கப்பட்டபோதிலும் பொதுஜன இயக்கமாகவே அது விருத்தியடைந்து விடும். காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பலம் முழுவதும், தேசத்தின் கவனம் முழுவதும், இந்த விஷயத்திலேயே செலுத்தப்படவேண்டும். மார்ச்சு மாதம் இருபத்தோராந் தேதி அகில இந்திய காங்கிரஸ்கமிட்டி கூடுவதாக நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. அஃது அப்பொழுதிருக்கும் நிலைமையைப் பரிசீலனை செய்து, எதிர் காலத்தில் செய்யப்படவேண்டிய வேலைகளுக்கு உத்தரவு அளிக்கும். அதற்குள், எல்லா மாகாண காங்கிரஸ்கமிட்டிகளும் பொதுவான நிலைமையைப்பற்றி ஆராய ஆங்காங்குக் கூடவேண்டும்; தங்களுடைய மாகாணத்தில் என்னென்ன விதமான வேலைத்திட்டத்தை நடத்த உத்தேசம் என்பதை நிர்ணயம் செய்யவேண்டும்.

சட்டமறுப்புத் தொடக்கத்தை எல்லாக் காங்கிரஸ்காரர்களும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பது இயற்கையே யாகும். ஒழுங்காக நடந்துகொள்வதன் மூலமாகக் காங்கிரஸ்காரர் இந்த இயக்கத்திற்குப் பெருந்துணை செய்யவேண்டும். பலாத்காரமற்ற தன்மையே, இத்தகைய செயலின் சாரம் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். தக்க காலத்தில், அவர்கள், தங்கள் மாகாணத்திலேயே சட்டமறுப்புக்காரர்களாகலாம். ஆனால் இதனை ஆகுமுன் ஒழுங்காக நடைபெறுவதோடு மத்திய ஸ்தாபனத்திற்கு உதவி புரிவதாகவும் இருக்கவேண்டும். எந்த விதமாக சட்டமறுப்பை ஆரம்பிக்கலாமென்பதைப்பற்றி யோசிப்பது மாகாண காங்கிரஸ் கமிட்டிகளின் கடமையாகும். லாகூர் காங்கிரசில் அங்கீகரிக்கப்பட்ட தீர்மானமும், சுயேச்சை தினத்தில் எடுத்துக்கொண்ட உறுதி மொழியும் நிறைவேற்றப்படவேண்டும். ஆதலின் காரியத்திலிறங்கச் சித்தமாயிருங்கள். காலம் நெருங்கிவிட்டது.

### பம்பாயில் பண்டித ஜவஹரிலாலின் சொற்பொழிவு

பண்டித ஜவஹரிலால் நேருவும், காங்கிரஸ் காரியக்கமிட்டியின் அங்கத்தினரிற் சிலரும் 17-2-30-ல் பம்பாய் வந்தார்கள். பண்டித ஜவஹரிலால், ஆடம்பரமான ஊர்வலத்துடன் காங்கிரஸ் மண்டபத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார். காங்கிரஸ் மண்டபத்திற்கு ஊர்வலம் வந்து சேர்ந்ததும் பண்டிதர் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம் வருமாறு:—

காரியக்கமிட்டி நிறைவேற்றியுள்ள தீர்மானங்களை நீங்கள் செயலில் கொணர வேண்டும். பலாத்காரத்தின் மூலமாக சுதந்திரத்தையடைய முடியும் என்று நம்புகிறவர்கள், காரியக்கூட்டத்தின் தீர்மானத்திற்குக் கட்டுப்பட்டவரல்லர். ஆனால் தற்போசைய நிலையில் அஹிம்சா தர்மத்தின் மூலமாகவே, சுயராஜ்யத்தைப் பெற முடியும் என்பதைப் பற்றி நீங்கள் திருப்தி யடைவீர்களானல், காந்தியடிகளையே நீங்கள் பின்பற்ற வேண்டும்; அஹிம்சா தர்மத்தையே கைக்கொள்ள வேண்டும். காந்தியடிகளும் பிற தலைவர்களும் கைது செய்யப்பட்ட போதிலும், நீங்கள் அஹிம்சா தர்மத்தைக் கைவிடாமல், சுயேச்சையைப் பெறும்வரை போராட்டத்தை நடத்தித் தீரவேண்டும்."

### மாதர்கள் கூட்டம்

பண்டித ஜவஹரிலால் பம்பாயில் பல பொதுக் கூட்டங்களில் காங்கிரஸ் தீர்மானத்தை விளக்கிப் பேசி வருகிறார். 19-2-30-ல் ஜின்னா மண்டபத்தில் அவர் மாதர்களடங்கிய ஒரு பொதுக்கூட்டத்தில் பேசியபோது, இங்குக் கூடியுள்ள ஸ்திரீகள் பிற ஸ்திரீகளுக்குக் காங்கிரஸ் செய்தியை எடுத்துரைக்க வேண்டுமென்றும், சுதேசியத்தை ஸ்திரீகள் ஆதரிக்க வேண்டுமென்றும், இதுவும் உங்களால் முடியாவிட்டால், அந்நியத் துணிகளையாவது வாங்காதிருத்தல் நலமென்றும் கூறினர். பல ஸ்திரீகள் காங்கிரஸ் அங்கத்தினர்களாகப் பதிவு செய்து கொண்டார்கள்.

# போர் முரசு

## சேனைத் தலைவர்களின் முன்னணிவேலை

### அன்புந் தியாகமும் கருவிகள்

மஹாராஷ்டிரர்கள் அடங்கிய ஒருபொதுக் கூட்டத்தில் பேசியபோது, மஹாராஷ்டிரர்களே எப்போதும் போரின் முன்னணியில் நிற்கிறார்களென்றும், மஹாராஷ்டிர காங்கிரஸ் கமிட்டியார், லாகூர் தீர்மானங்களை ஆதரிக்கவில்லையாயினும், போர் தொடங்கி விடப்பட்ட பிறகு வாதஞ் செய்வதற்கு இடமில்லை யென்றும், தேசத்திற்குச் சுதந்திரம் வேண்டுவோர், உடனே போரில் சேர்ந்துகொள்ள வேண்டுமென்றும் கூறினார்.

பிறகு, ரானட் வைத்தியக் கல்லூரி மாணக்கர்களும் ஆசிரியர்களும், பண்டித ஜவஹரிலாலுக்கு ஓர் உபசாரப் பத்திரம் படித்துக் கொடுத்தார்கள்.

### காந்தியடிகளும் சட்ட மறுப்பும்

மகாத்மா காந்தி, பத்திரிகைப் பிரதிநிதி ஒருவரிடம் பேசிக் கொண்டிருக்கையில், தமது சட்ட மறுப்பு இயக்கத்தில், கள்ளுக்கடை மறியல், அந்நியத்துணிக் கடைகளின் மறியல் முதலியவைகளும் சில பாகங்களாக இருக்குமென்று கூறினர்.

### இளைஞர்கள் எழுச்சி

#### குஜராத்வித்தியாபீடத்து மாணக்கர்கள் தொண்டர்களாகச் சேர்க்கப்படுகிறார்கள்

குஜராத் வித்தியா பீடத்தில் படிக்கும் பதினெட்டு வயதுக்கு மேற்பட்ட மாணக்கர்கள், காந்தியடிகள் தலைமையில் நடைபெறப் போகும் சட்ட மறுப்பு இயக்கத்தில் சத்தியாக்கிரகத் தொண்டர்களாகப் பதிவு செய்து கொள்ள வேண்டுமென்று, மேற்படி வித்தியா பீடத்துத் தலைவரான அறிஞர் கலேல்கார், மேற்படி வித்தியாபீடத்துச் சான்ஸலரான மகாத்மா காந்தியின் ஆணைப்படி ஓர் உத்தரவு வெளியிட்டிருக்கிறார். அப்படித் தொண்டர்களாகப் பதிவு செய்து கொள்ளப்பட விருப்பமில்லாதோர் உடனே வித்தியா பீடத்தினின்று வெளியேறிவிட வேண்டுமென்று மேற்படி உத்தரவில் காணப்பட்டிருக்கிறது. பதினெட்டு வயதுக்குட்பட்ட மாணக்கர்கள், படிப்பதற்கு வேண்டிய வசதிகளை வித்தியாபீடத்து அதிகாரிகள் செய்வார்கள். மேற்கண்ட உத்தரவுக்கிணங்கி பல மாணக்கர்கள் தொண்டர்களாகப் பதிவுசெய்து கொண்டிருக்கிறார்கள்.

### கத்தியவார் சத்தியாக்கிரக தளம்

கத்தியவார் சத்தியாக்கிரக தளத்தின் விசேஷக் கூட்டமொன்று 17-2-30-ல் ஜேராவர் நகரில் ஸ்ரீமான் மணிலால் கோதாரியின் தலைமையில் கூடியது. மேற்படி தளத்தின் எல்லா அங்கத்தினர்களும், காங்கிரஸுக்கு அங்கத்தினர்களைச் சேர்த்தல், கதர், அந்நியத் துணி பகிஷ்காரம், தீண்டாமை விலக்கு ஆகிய இந்த விஷயங்களில் உடனே ஈடுபட வேண்டுமென்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### கராச்சியில் ஊக்கம்

கராச்சி ஹிந்துஸ்தானி சேவா தளத்தினர், டாக்டர் ஹார்டிகாரின் வேண்டுகோளுக்கிணங்கி, இரண்டு யூனிட்டு சத்தியாக்கிரகத் தொண்டர்களைச் சேர்த்துத் தருவதாகக் கூறி யிருக்கின்றனர். தொண்டர்களைப் பதிவுசெய்யும் பிரசாரம் தினந்தோறும் கராச்சியில் நடைபெற்று வருகிறது. உப்பு சத்தியாக்கிரகத்திற்கும், கள்ளுக்கடை மறியல், அந்நியத் துணிக் கடைகளின் மறியல் இவைகளுக்கும் கராச்சி சித்தமாயிருக்கிறதென்ற உணர்ச்சி அங்கு பலமாயிருக்கிறது. 18-2-30-ல் ஹைதராபாத்தில் (சிந்து) நடைபெற்ற மதுபானக் கடைகளின் ஏலத்தின்போது, எவரும் ஏலமெடாமலிருந்தது குறிப்பிடத்தக்கது.

கர்நாடக சேவாதளத்தினர் இதுவரை, நூறுதொண்டர்களைப் பதிவுசெய்திருக்கின்றனர்.

## தலைவர்களின் பிரசாரம்

### மார்வாரிகளுக்கு சேத் கோவிந்ததாஸின் வேண்டுகோள்

சேத் கோவிந்ததாஸ், கோண்டியா என்னுமிடத்தில் 20-2-30-ல் சேத் சுராஜ்மல் அவர்கள் தலைமையில் மார்வாரிகளடங்கிய ஒரு பொதுக்கூட்டத்தில் பேசியபோது, வரும் போராட்டத்தில், மார்வாரிகள் சிறந்த பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்றும், இதுகாறும் மார்வாரிகள் தேசியப் போராட்டங்களுக்கு அதிகப் பணங்கொடுத்து வந்தார்களென்றும், ஆனால் இப்பொழுது அவர்கள் முன்வந்து, தேசவிடுதலையின் பொருட்டு அதிகமான தியாகங்களைச் செய்யவேண்டுமென்றும் கூறினர்.

### ஸ்ரீ கொண்டா வேங்கடப்பையாவின் செய்தி

ஸ்ரீமான் கொண்டா வேங்கடப் பையா, பிஜபூரிலிருந்து பின்வருஞ் செய்தியை வெளியிட்டிருக்கிறார்:—

ஹிந்துஸ்தானி சேவாதளமே, இந்திய தேசிய காங்கிரசின் சரியானபடையாகும். இதில் பலாத்கார மற்ற வீரர்கள் நிரம்பியிருக்கிறார்கள். இந்தியாவின் சுதந்திரத்திற்காகப் போராடும் பொருட்டு இவர்கள் பழக்கப்படுத்தப் பட்டிருக்கிறார்கள். சுயேச்சை பெற வேண்டுமென்று காங்கிரஸ் தீர்மானித்து விட்டது. இந்த இலட்சியத்தை யடைய வேண்டுமென்ற நோக்கத்துடன், சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்குவதற்காக மகாத்மா காந்தியை அது நியமித்திருக்கிறது. ஆதலின் ஹிந்துஸ்தானி சேவா தளத்தைச் சேர்ந்த ஒவ்வோர் வீரரும், காந்தியடிகள் ஆணை கிடைத்ததும் போர் முனைக்குச் செல்ல வேண்டும்; அவருடைய கட்டளைப்படி நடந்து கொள்ள வேண்டும். இந்தப் போராட்டத்தைத் தொடங்குவது, இதனை நடத்துவது முதலிய எல்லா விஷயங்களும், அஹிம்சா தர்மத்தில் நம்பிக்கை கொண்டுள்ள வர்கள்வசமே ஒப்புவிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலின், சேவாதளத்துத் தொண்டர்கள் பதிவுக்குப்பின் செய்துகாட்ட வேண்டுமென்ற எண்ணத்தை விடுத்து, கஷ்டங்களை அநுபவிப்பதும், துன்பங்களைச் சகிப்பதுமே தங்கள் கடமையென்று கொள்ள வேண்டும். இந்நோக்கத்துடனேயே அவர்கள் போருக்குச் செல்ல வேண்டும்.

### ஸ்ரீ இராஜ கோபாலாச்சாரியார் பிரசாரம்

#### பம்பாயில் சொற்பொழிவு

சென்ற வாரம் பம்பாயில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் ஸ்ரீமான் ச. இராஜ கோபாலாச்சாரியார் பேசுகையில் பின் வருமாறு குறிப்பிட்டார்:—

இனி நடைபெறப்போகும் போராட்டத்தில் மூன்று படிகள் இருக்கின்றனவென்று கூறலாம். மகாத்மா காந்தி கைது செய்யப்பட்டதும் முதற்படியைக் கடந்து விடுகிறோம். அப்பொழுது தான் சரியான யுத்தம் தொடங்கும். காந்தியடிகளின் உண்மையான நோக்கமும் அப்பொழுதே வெளியாகும். மகாத்மா காந்தி கைது செய்யப்படும் வரை அவரே தலைமை வகித்துப் போராட்டத்தை நடத்துவார். இரண்டாவது படியில் மற்றத் தலைவர்களின் தலைமையின்கீழ் போராட்டம் நடைபெறும். எல்லாத் தலைவர்களும் கைது செய்யப்பட்டு விட்ட பிறகு மூன்றாவதுபடி வந்து சேரும். அப்பொழுதுதான் அரசாங்கப் பள்ளிக்கூடங்கள், நீதி ஸ்தலங்கள், உத்தியோகஸ்தர்கள் முதலிய அரசாங்கத் தொடர்பு பெற்ற எல்லா ஸ்தாபனங்களிலிருந்தும் ஒத்துழைப்பை நிறுத்திக் கொள்ள வேண்டுவது ஒவ்வோர் இந்தியரின் கடமையாகும். இலட்சக்கணக்கான இந்தியர்களின் ஒத்துழைப்பு பின்றேல், அரசாங்க இயந்திரம் செல்லாது. அந்த நெருக்கடியான சமயத்தில், இந்தியர்கள் தங்கள் கடமையைச் செய்யாவிட்டால், தங்களையும் தங்கள் சத்தியத்தையும், உலகத்தின் கண்முன்னர் அவமானத்திற் குட்படுத்திக் கொண்டவர்களாவார்கள்.

#### நாசிக்கில் சொற்பொழிவு

ஸ்ரீமான்கள் ச. இராஜகோபாலாச்சாரியார், கங்காதரராவ் தேஷ் பாண்டே, வாசுதேவ ராவ் ஜோஷி, சங்கர ராவ் தேவ் முதலியோர் 20-2-30 பிரபல ஸ்தலமாகிய நாசிக்குக்கு வந்தார்கள். அன்று மாலை கோதாவரி நதிக்கரையில் ஒரு பெரிய பொதுக் கூட்டம் நடைபெற்றது. அது கால ஸ்ரீமான் ச. இராஜகோபாலாச்சாரியார் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரத்தை நமக்கு ஒரு நிருபர் அனுப்பியிருக்கிறார். அது வருமாறு:—

இந்த நெருக்கடியான காலத்தில் நாம் பிறந்திருப்பது நமது பாக்கியமே யாகும். மேலும், வீரத்தையே பிரதானமாகக் கருதும் இந்தச் சமயத்தில் நாம் இளமையோடு கூடியிருப்பதும் பாக்கியமே யாகும். வயோதிகர்களுக்குப் பெரிய மனது இருக்கலாம். ஆனால், தங்கள் மனோசக்தியைச் செயலில் நடத்திக் காட்டப் போதிய ஆற்றல் அவர்களிடமில்லை. இளைஞர்களுக்கோ, வேண்டிய அளவு தியாகத்தைச் செய்வதற்குப் போதிய தாராளத் தன்மை, சக்தி, அறிவு, தேகபலம் முதலியன இருக்கின்றன. பலாத்காரமில்லாத போழ்து, புஜபலம் எதற்கு என்று நீங்கள் கேட்கலாம். அதற்கு ஒரு காரணம் இருக்கிறது. கங்காதரராவ் தேஷ் பாண்டேயையாவது என்னையாவது சிறையில் அடைத்துவிட்டால், வீட்டுக்குத் திரும்பிப் போக வேண்டுமென்ற எண்ணம் எங்களுக்கு உண்டாகலாம். சிறைச் காவலரின் மிரட்டல்களினால் நாங்கள் சோர்ந்து போதல் கூடும். ஆனால், நீங்களோ, உங்களுக்குப் போதிய தேக பலமும், எளிய பழக்கவழக்கங்களும் இருந்தால் எல்லாக் கஷ்டங்களையும் சகித்துக் கொள்வீர்கள்.

### அஹிம்சையே ஆயுதம்

காலத்திற் கேற்றபடி யுத்த ஆயுதங்களும் மாறு படுகின்றன. ஸ்ரீ இராமச்சந்திரர் விற்களினாலும் அம்புகளினாலும் போர் செய்தார். இப்பொழுது மேனாட்டார் இயந்திர பீரங்கிகளாலும், துப்பாக்கிகளாலும் போராட்டத்தை நடத்துகின்றனர். ஆனால் நாம், இவை யெல்லாவற்றைக் காட்டிலும் புதிய விதமான ஆயுதத்தைக் கொண்டு போராட வேண்டும். இப்பொழுது கிடைக்கக் கூடிய எல்லா யுத்த ஆயுதங்களையும் நாம் பரிசீலனை செய்து பார்த்து விட்டோம். இரத்த வெறியோடுகூடிய தற்கால ஆயுதங்களை நமது போராட்டத்திற்கு உபயோகிக்கக் கூடாதென்று தீர்மானித்தோம். நீதமற்ற, அழகான அஹிம்சா தர்மம் என்பதையே, நமது எதிர்காலப் போராட்டத்திற்கு ஆயுதமாக உபயோகிக்கத் தீர்மானித்தோம். இதன் மூலமாக, தான் மட்டும் சுதந்திரம் பெறவேண்டு மென்பது இந்தியாவின் நோக்கமன்று; இரத்த வெறி பிடித்த போராட்டங்களினின்று உலகத்தை விடுதலை செய்யவேண்டு மென்பதும் அதன் நோக்கமாகும்.

இதனாலேயே, இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் நடைபெறும் இந்தப் போராட்டத்தை உலகமெல்லாம் கவனித்துக் கொண்டிருக்கிறது. இந்தியா சுதந்திரம் அடைய வேண்டுமென்று அமெரிக்கா, ஜர்மனி முதலிய நாடுகள் ஆவல் கொண்டிருக்கின்றன என்று நீங்கள் கருதவேண்டாம். ஆனால் நாம் நடத்தும் இந்த அஹிம்சைப் பரிசோதனையிலேயே அவை அதிக ஊக்கஞ்செலுத்தி வருகின்றன. யுத்தத்தை ஒழிப்பதெப்படி என்பதைப்பற்றி அவை சிந்தித்துக் கொண்டிருக்கின்றன. அதனாலேயே நாம் நடத்தும் இந்தப் போராட்டத்தில் அவை அதிக ஊக்கங்காட்டுகின்றன. கிறிஸ்துவப் பெருமானின் போதனைகளுக்குப் பிறகு அஹிம்சா ஆயுதங்களைக்கொண்டு இந்தியா வெற்றி பெறுவதையே மேனாட்டார் அதிக மகிழ்ச்சியாகக் கொள்வர்.

இங்கிலாந்தின் கவலையைக் கவனியுங்கள்; அதைக்கண்டு, நம்பிக்கை கொள்ளுங்கள். நமது சத்துருக்களின் நடத்தை நமக்கு அதிக பாடங்களைக் கற்பிக்கும். இங்கிலாந்து, இந்தியாவிலுள்ள யாருக்கு அதிகமாகப் பயப்படுகிறது? நம்முடைய தலைவரைக்கண்டே, பெரும்பான்மை யோரான இங்கிலீஷ்காரர் பயப்படுகின்றனர். ஆதலின் நாம் அனைவரும் காந்தியடிகளைப்பின்பற்றுவோமாக. நாம் இந்த யுத்தத்தில் தோல்வியடைந்தால், நமதுபெயர் கள் மட்டும் பிற்காலத்தில் வழங்கப்படும். வெற்றியடைந்தோமாகில், நமது சந்ததியார் பெறற்கரிய சுதந்திரத்தைப் பெற்று மகிழ்வர். உயர்ந்த நோக்கங்களைக் கொள்ளாத வாழ்க்கை பயனற்றது. பிறர்க்குத் தொண்டு செய்தல், தியாகபுத்தி ஆகிய இவைகள் நாம் இந்த வாழ்க்கையில் நிறைவேற்ற வேண்டிய கடமைகளாகும்.

நம்மால் ஒன்றுஞ்செய்ய முடியாதென்று நமக்கு அடிக்கடி கூறப்படுகிறது. இதனால் இதனை நாம் நம்பக்கூடிய நிலைக்கு வந்திருக்கிறோம். முப்பது கோடி ஜனங்களாகிய நாம் அந்நியர் சிலரால் ஆளப்படுகிறோம் என்பது உலக ஆச்சரியங்களில் மிகப் பெரியதென்பதை நாம் கண்டோமில்லை. இந்த வாழ்க்கைக்கு நாம் இணங்கியே இருக்கிறோம். இந்த இணக்கத்தை நீங்கள் நிறுத்திக்கொள்ளுங்கள். அப்பொழுது இந்த ஆட்சி என்னவாகிறதென்று பாருங்கள். இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் லோகமான்ய திலகர் இதை எடுத்துக்காட்டினர். இதனை எப்படி நடைமுறையில்

சொணர்கதென்பதை இப்பொழுதே கண்டோம். சட்டமறுப்பு இயக்கத்தின் கொடி தூக்கப்பட்டுவிட்டது. வீரம் பொருந்திய ஆண்களும் பெண்களும் இந்தக்கொடியின் கீழ் வந்து சிறைச்சாலைகளை நிரப்பவேண்டும். வெளியிடங்களைக் காட்டிலும் சிறைச்சாலைகளில் அதிக சாப்பாடு இருக்கிறது. குடியானவர்கள், கைதிகளைப்போல் அவ்வளவு நன்றாகப் போஷிக்கப்படுவதில்லை. நான் கூட, இந்தச் சுதந்திரப் போராட்டத்தில் பங்கெடுத்துக்கொண்டேன் என்று உங்கள் பிள்ளைகளுக்கும் பேரப்பிள்ளைகளுக்கும் பெருமையாகச் சொல்லிக்கொள்ள நீங்கள் விரும்பப்படவில்லையா? ஆதலின் இளைஞர்களே! எழுங்கள்!

### சில தவறான அபிப்பிராயங்கள்

பிரிட்டிஷ் அரசாங்கத்தைப்பற்றி ஏற்பட்டிருக்கும் அபிப்பிராயங்கள் ஆச்சரியகரமாயிருக்கின்றன. தீண்டாமை ஒழிய வேண்டுமானால், பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இருப்பது அவசியமாகும் என்று தீண்டாதார் நினைக்கும் வண்ணம் சொல்லப்படுகிறது. அப்படியே, உயர்ந்த ஜாதியார், தீண்டாதாரினின்று தங்களைக் காப்பாற்றிக் கொள்ளவும், தங்கள் கோயில்களில் தீண்டாதார் நுழையாதிருக்கவும் பிரிட்டிஷ் அரசாங்கம் இருக்க வேண்டியது அவசியமென்று கருதும் வண்ணம் செய்யப்படுகின்றனர். பிரிட்டிஷ் அரசாங்கம் இருப்பது தங்களுக்கு நல்லதென்று வைதிக பிராமணர்கள் நினைக்கிறார்கள். சீர்திருத்தக்காரர்களோ, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழேயே சீர்திருத்தங்கள் நடைபெற முடியுமென்றும், சுயராஜ்ய காலத்தில் முடியாதென்றும் கருதுகின்றனர். பிரிட்டிஷ் அரசாங்கத்தின்கீழ் தாங்கள் நன்னிலையிலிருக்க முடியுமென்று முஸல்மான்கள் கருதுகின்றனர். முஸல்மான்களை அடக்கி வைக்கப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் துணை வேண்டுமென்று ஹிந்துக்கள் கருதுகிறார்கள். இந்த முரண்பட்ட அபிப்பிராயங்கள், வேற்றுமையை ஆதாரமாகக் கொண்டு எது வாழ்கிறதோ அதை விலக்க வேண்டிய அவசியத்தை உணர்த்தும்.

### சுயராஜ்யத்தின் அவசியம்

சுயராஜ்யம் பொருளாதார அவசியமாகும். இங்கிலீஷ்காரர் நல்ல வியாபாரிகள். அப்படியே பிரஞ்சுக்காரரும், ஜர்மானியரும், அமெரிக்கரும் நல்ல வியாபார தந்திரசாலிகள். தங்களுக்குச் சுதந்திரம் இருந்தால்தான் தங்களுடைய வியாபாரமும் வர்த்தகமும் செழிக்கும் என்பதை இவர் ஒவ்வொருவரும் அறிந்து கொண்டிருக்கின்றனர். தேசிய சுதந்திரம் போய்விட்டால் வறுமையே வந்து சேரும். இதனாலேயே இவர்கள், தங்கள் சுதந்திரத்தை இழக்க விரும்புவதில்லை. அப்படியிருக்க இந்தியாவுக்கு மட்டும் சுதந்திரம் என்பது செத்தலாக முடியாது. சுதந்திரமும் செழுமையும் ஒன்றைக்கொன்று தழுவிச் செல்வனவாகும். நாம் சுதந்திரம் பெற்றால்தான், இப்பொழுது இராணுவத்திற்கென்று செலவழிக்கப்படும் அறுபது கோடி ரூபாய்களும் இந்தியாவிலேயே பலபயனுள்ள வழிகளில் செலவழிக்கலாம். சுதந்திரம்பெற்றால், மதுபான வியாபாரம் நின்றுபோகும். அந்நிய அரசாங்கம் நம்மை ஆண்டுவருவதால் ஒவ்வொரு வருஷமும் நமது கடன் அதிகமாகிக்கொண்டு வருகிறது. நாம் சுதந்திரத்தைப் பெற்றால்தான், இப்பொழுது தேசத்து சனத்தின் முன்னணியில் நிற்கும் வேலையில்லாத் திண்டாட்டமும் நீங்கும்.

---

முப்பத்திமூன்று நாட்களாக இந்தியா சட்டசபையில் மூடப்பட்டுக் கிடந்த பார்வையாளர் சாலரிகளில் 24-2-30ல் பார்வையாளர்கள் உட்கார்ந்திருக்க அநுமதிக்கப்பட்டார்கள்.

o o o

சென்னை மாகாணத்தில் குதிரைப் பந்தயக் கடைகளை ஒழிக்க வேண்டுமென்று சென்னைச் சட்டசபையில் சட்டமாக நிறைவேற்றப்பட்ட சூதாட்ட பந்தய மசோதாவைக் கவர்னர் அங்கீகரித்து விட்டார். கடைசியாக அம்மசோதா அமுலுக்கு வருவதற்கு முன்னர் கவர்னர் ஜெனரல் அங்கீகாரத்திற்கு அனுப்பப்பட்டிருக்கிறது.

---



## "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ்?"

### காந்தியடிகளும் சட்டமறுப்பும்

சென்ற வாரத்து "யங் இந்தியா" பத்திரிகையில் மகாத்மா காந்தி பின்வருமாறு எழுதுகிறார்:—

காங்கிரஸ் காரியக்கூட்டம் நிறைவேற்றியிருக்கும் தீர்மானம், எனக்கு உரிமைப்பத்திரம் அளித்திருக்கிறது. ஆனால் அஃது என்னை இறுக்கிப் பிணித்தும் விட்டது. சென்ற சில மாதங்களாக நான் தேடிக்கொண்டிருந்த வழி இதுவேயாகும். காரியக் கூட்டத்தின் தீர்மானம், என்னைப் பொறுத்தமட்டில் அரசியல் சம்பந்தமானதன்று; மதசம்பந்தமானது. எனக்கு ஏற்பட்ட கஷ்டம் அடிப்படையானது. பலவித மனப் போக்குடையவர்களடங்கிய ஓர் அமைப்பில், அஹிம்சா தர்மத்தை நடத்த முடியாதென்று நான் கண்டு கொண்டேன். பெரும்பான்மையோருடைய தீர்மானப்படி இதனை நடத்தமுடியாது.

ஒருவனுக்கு இரண்டு விஷயங்களை அளித்து, அதில் ஏதேனுமொன்றைத் தழுவ வேண்டுமென்று கூறப்பட்டால் அவன் பலவித ஆசைகளுக்கு உட்பட வேண்டியவனாயிருக்கிறான். அஹிம்சா தர்மத்தை ஓர் உபாயமாகக் கொண்டுள்ளோர், பலாத்காரத்தினால் தூண்டப்பட்டால், அவர்களுடைய அஹிம்சையானது அவர்களைப் புறக்கணித்து விடும். அஹிம்சையைத் தவிர வேறு பரிகாரமில்லையென்று உணர்ந்தவர்கள், தங்களிடத்தில் உண்மையான அஹிம்சையைப் பெற்றிருப்பார்களாயின், அந்த அஹிம்சை அவர்களை எப்பொழுதும் கைவிடாது. இதனாலேயே, காங்கிரஸ் கட்டுப்பாட்டினின்று நான் விடுதலை வேண்டினேன். காங்கிரஸ் காரியக் கூட்ட அங்கத்தினர்கள், எனது நிலைமையை உணர்ந்ததற்காக அவர்களுக்கு நான் நன்றி செலுத்துகிறேன்.

எனது நிலைமையைப்பற்றி எவரும் தவறாகப் பொருள் கொள்ளமாட்டாரென்று கருதுகிறேன். இதில் உயர்வு என்பது ஒன்றுமில்லை. சில நிறமுள்ளவர்க்கும் மஞ்சள் நிறமுள்ளவர்க்கும் எப்படி வேற்றுமை இருப்பதில்லையோ, அப்படியே, சுதந்திரம் பெறுவதற்கு அஹிம்சையே தகுந்த சாதனம் என்று உண்மையாக நம்புகிறவர்களுக்கும், அதனை உபாயமாகக் கொள்பவர்களுக்கும் வேற்றுமையில்லை. ஒவ்வொருவரும் தத்தமக்குத் தோன்றியபடி நடக்கின்றனர்.

இப்பொழுது எனக்கு ஏற்பட்டிருக்கும் பொறுப்பானது, இதுகாறும் நான் ஏற்றுக் கொண்ட பொறுப்புகளை விட மிகப்பெரியது. இந்தப் பொறுப்பை மறக்க முடியாது. ஆனால் அஹிம்சையே என்னை நடத்திச் செல்லுமானால், எல்லாம் இனிதாகவே முடியும். "அஹிம்சை முன்னர், துவேஷம் நைந்து போகும்" என்று ஒருபெரியார் கூறியுள்ளார். விவிலிய நூலும் பின்வருமாறு கூறுகிறது:—

"அன்பு, தன் அயலானுக்குத் தீங்குவினைப் பதில்லை. அஃது எல்லாரையும் நம்புகிறது; எல்லா விஷயங்களிலும் நம்பிக்கை கொள்கிறது; அஃது எப்பொழுதும் தவறியதில்லை."

சட்டமறுப்பு என்பது, அன்பின் உறுதியான ஆணையேயாகும். அஃது ஆபத்து என்பதில் ஐயமில்லை; ஆனால் அதனைச் சூழ்ந்து நிற்கும் பலாத்காரத்தை விட ஆபத்தானதல்ல. இந்த பலாத்காரத்தினின்று, அஹிம்சா முறையில் தப்பித்துக்கொள்ள வழி சட்டமறுப்பேயாகும். ஒரே வழியில்தான் ஆபத்திருக்கிறது. அதாவது சட்டமறுப்போடு கூட, பலாத்காரமும் ஏற்பட்டுவிட்டால் அப்பொழுதே ஆபத்து இருக்கிறது. அப்படிப் பலாத்காரம் ஏற்பட்டால், நான் பார்தோலியில் பின் வாங்கியது போல், இப்பொழுதும் பின்வாங்காமலிருக்க எனக்கு வழி தெரியும். சுதந்தரப் போராட்டத்தில், பலாத்காரத்தோடு அஹிம்சை யுத்தம் செய்யும் போழ்து, பலாத்காரம் எந்தஇடத்திலிருந்து தோன்றிய போதிலும், அஹிம்சாதர்மவாதி ஒருவன் உயிரோடு இருக்குமளவும், அந்த அஹிம்சாயுத்தம் நடைபெற்றுக் கொண்டு தானிருக்கும். இதைவிட மனிதன் அதிகமாகச் செய்ய முடியாது. ஆனால் இதைவிடக் குறைவாகச் செய்வது, அஹிம்சையில் நம்பிக்கையின்மையைக் காட்டுவதாகும்.

---

வாக்காளர்:— காங்கிரஸ், சட்டசபைகளைப் பகிஷ்கரித்திருக்கும்போது, காங்கிரஸ்காரராகிய நீங்கள் எப்படி இடைத்தேர்தலுக்கு நிற்கலாம்.

அபேட்சகர்:— தனி மனிதன் என்ற முறையில் அபேட்சகனாக நிற்கிறேன்.

வாக்காளர்:— அப்படியானால் காங்கிரஸ்வாதி என்ற முறையில், என்னுடைய வாக்கை உங்களுக்குக் கொடுக்க மறுக்கிறேன்.

## "அருளற்றார் அற்றார்"

### சட்டமறுப்பும் சில சந்தேகங்களும்

### காந்தியடிகள் சமாதானம்

சட்டமறுப்புச் சம்பந்தமாகச் சில நண்பர்களுக்கு ஏற்பட்டிருக்கும் சந்தேகங்களும் அவைகளுக்குக் காந்தியடிகள் அளித்திருக்கும் சமாதானங்களும் சென்ற வாரத்து "யங்இந்தியா" பத்திரிகையில் வெளியாயிருக்கின்றன. அவைகளின் சாரம் வருமாறு:—

வினா:— உங்களுடைய போராட்டத்தின் நடை முறைகளை அதிகாரிகளுக்கு முன்னரே அறிவியாமலும் அவர்கள் உங்களைச் சந்தித்துக் கைது செய்யச் சந்தர்ப்பமளியாமலும், உங்கள் போராட்டத்தை ஆரம்பிக்க மாட்டீர்களல்லவா?

விடை:— என்னுடைய பூர்வீக வரலாற்றை அறிந்தவர்கள், எதையும் இரகசியமாகவோ பொறுமையற்ற தன்மையிலோ செய்வது சத்தியாக்கிரகத்துக்கு விரோதமென்று நான் கருதுகிறேனென்பதைத் தெரிந்து கொள்வார்கள். நான் நிச்சயமான ஒரு நடவடிக்கையைத் தொடங்குவதற்கு முன்னர், என்னுடைய ஏற்பாடுகள் யாவும் இராஜப் பிரதிநிதிக்குத் தெரிவிக்கப்படும். தன்னுடைய எதிரிக்குத் தெரிவிக்கக்கூடாத இரகசியம் எதுவும் ஒரு சத்தியாக்கிரகிக்கு இல்லை.

வினா:— தேசம், சட்டமறுப்புக்குத் தயாராயில்லை யென்றும், நூதனமாக வரிகொடா இயக்கத்துக்குச் சித்தமாயில்லை யென்றும் நீங்கள் லாகூரில் கூறவில்லையா?

விடை:— இப்பொழுதும் தேசம் தயாராயிருக்கிறதென்று நான் கருதவில்லை. ஆனால், பலாத்காரமற்ற தன்மையிலிருக்கத் தேசம் சித்தமாயில்லை என்ற பொருளில், தேசம் தயாராயில்லை யென்பது அதிகமாகிக் கொண்டு போகிறதென்பது எனக்கு இப்பொழுது நன்றாகப் பலப்படுகிறது. இளைஞர்கள் பொறுமையிழந்து நிற்கிறார்கள். 1921-ம் ஆண்டில், காங்கிரஸ், சட்டமறுப்பைத் தொடங்கப் போவதாகத் தீர்மானித்திருந்ததால், பலர், தங்களுடைய பலாத்கார முயற்சிகளை நிறுத்திக் கொண்டனர். இக்கூட்டத்தார், தேசம் சட்டமறுப்புக்குத் தயாராயில்லை யென்று நான் அடிக்கடி கூறுவதால் இப்பொழுது அதிக சுறுசுறுப்புக் காட்டத் தொடங்கியிருக்கின்றனர்.

அஹிம்சாதர்மம் என்பது, உண்மையான ஒரு சக்தியாக இருக்குமாயின், அது பலாத்காரச் சூழலிலும் வேலை செய்யக்கூடியதாயிருக்கவேண்டும். தேசத்தின் பிரதிநிதியெனக் கூறிக்கொள்ளும் காங்கிரசானது, சட்டமறுப்பை ஆரம்பிக்க இயலாமலிருக்கிறது. தவிர, பலாத்காரத்தின் பொறுப்பை, மறுக்கவும் முடிவதில்லை. ஆதலின், சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டேன். எனக்கு நானே பொறுப்பாளி; தவிர, இந்தப் போராட்டத்திற்காக நான் யாராரைச் சேர்த்துக் கொள்கிறேனோ அவர்களுடைய பொறுப்பை மட்டும் நான் ஏற்றுக் கொண்டவனாகிறேன். சபர்மதி ஆசிரமத்தின் ஒழுங்குக்கு உட்பட்டவர்களையும், அந்த ஒழுங்குக்கு அநுபவ பூர்வகமாக ஈடுபட்டவர்களையுமே இந்தப் போராட்டத்தில் தற்போது சேர்த்துக் கொள்ள உத்தேசித்திருக்கிறேன். இந்தப் போராட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது, தேசத்தினரால் ஏதேனும் பலாத்காரச் செயல்கள் நிகழ்த்தப்படுமானால், அதற்காக நான் என் பொறுப்பைக் கழிக்கமாட்டேன் என்பதுண்மை. ஆனால் இந்தப் பொறுப்பு எனக்கு எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கும். தேசத்திற்கு இழைக்கப்படும் தீங்குகளுக்குப் பிரிட்டிஷார் எப்படிப் பொறுப்பாளிகளாவரோ, அப்படியே, அவருடன், என் விருப்பத்துக்கு மாறாக வேனும், ஒத்துழைக்கும் அளவுக்கு நானும் அவர்களுடன் பொறுப்பாளியாவேன். மேலே கூறப்பட்ட பொறுப்பு, இந்தப் பொறுப்பைவிடச் சிறிது அதிகமானது. உதாரணமாக, நேராகவோ, நேர்முக மின்றியோ, வரிசெலுத்துவதன் மூலமாக இந்த அரசாங்கத்துடன் நான் ஒத்துழைத்தவனாகிறேன். நான் தின்னும் உப்பானது என்னை ஒத்துழைக்கும்படி கட்டாயப்படுத்துகிறது. என்னுடைய அஹிம்சா தர்மமானது பொறுமையற்ற தேசாபிமானிகளின் பயனற்ற பலாத்காரத்தையும் பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான். என்னுடைய அஹிம்சாதர்மமானது, பிரிட்டிஷ் ஆட்சியைச் சிறிது அசைத்தே விட்டிருக்கிறது. அப்படியே, நான் தைரியமாக, என்னுடைய அஹிம்சா தர்ம முறையை நடை முறையில் கொணர்ந்தால் அதாவது, சட்டமறுப்புத் தொடங்கினால், மேற்கண்ட தேசாபிமானிகளின் பலாத்காரமும் குலைந்து போகும்.

நானே இந்தச் சட்டமறுப்பு இயக்கத்திற்குப் பொறுப்பு ஏற்றுக் கொள்கிறேனாதலின், பலாத்காரச் செயல்கள் அதிகமாக எழாதபடி செய்தவனாகிறேன். "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகை கூறியது போல், இந்தப் போராட்டம் "ஒரு சூதாட்டக்காரனின் கடைசி வீச்சு" ஆகும். என் வாழ்க்கை முழுவதிலும் நான் ஒரு சூதாட்டக்காரனாகவே இருந்திருக்கிறேன். உண்மையைக் கண்டு பிடிக்கும் முயற்சியில், அஹிம்சையைப் பின்பற்றி நிற்பதில், நான் எதையும் பெரிதாகப் பொருட்படுத்தியதில்லை. இங்ஙனம் நடந்து கொண்டது தவறானால், இந்தத் தவறை, உலகத்தில் தோன்றிய விஞ்ஞான சாஸ்திரிகளுள் மிகச்சிறந்தவரும் இழைத்திருக்கிறார் என்று கூறுகிறேன்.

### ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமை

வினா:— ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமையைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன? இந்த ஒற்றுமை இல்லாவிட்டால் சுயேச்சை கிடைத்தும் என்னபயன்?

விடை:— ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமையைப்பற்றி நான் கொண்டிருக்கும் நம்பிக்கை முன்போலவே பிரகாசமாயிருக்கிறது. பலஹீனமுள்ள ஒரு சிறுபான்மைக் கூட்டத்தினருக்கு விரோதமாக எனக்குச் சுயேச்சை வேண்டுவதில்லை. லாகூர் காங்கிரசில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம், இதுகாறும் இத்துறையில் செய்யப்பட்ட முயற்சிகளை உருவகப்படுத்திக் கூறியிருக்கிறது. எல்லாக் கட்சியாருக்கும் திருப்தியளிக்கக் கூடியதாகவே, காங்கிரஸ் ஒரு பரிகாரத்தைக் கூறும். ஆதலின், வகுப்புரிமைகளைப் பொறுத்த மட்டில், எல்லாவகுப்புகளுக்கும் திருப்தி ஏற்பட்டாலன்றி, எத்தவிதமான சுயேச்சைத் திட்டத்தையும் காங்கிரஸ் ஒத்துக்கொள்ளாது. தேசம் அனைத்தும் சுதந்திரமாயிருப்பதற்கு வேண்டிய சக்தியைக் கிளப்பவே, சட்டமறுப்பு இயக்கம் தொடங்கப்படுகிறது. ஆனால் இதற்கு எல்லாக் கட்சியாரும் ஒன்று படவேண்டும். வகுப்புரிமைகள் ஒருமுடிவாக நிர்ணயிக்கப் பட்டாலன்றி, சட்டமறுப்பு இயக்கத்தைத் தொடங்கக் கூடாதென்று கூறுவது தவறாகும். இதற்கும் அதற்கும் சம்பந்தமில்லை. காங்கிரஸ், உண்மையான தேசப்பிரதிநிதி சபையாயிருக்குமானால் பலஹீனமுள்ள வகுப்புகளின் உரிமைகளைப் பாதுகாத்து நிற்கும் பல நடுநிலைமையுள்ள ஸ்தாபனமாயிருக்க வேண்டும். இத்தகைய காங்கிரஸில் தேசத் தொண்டர்களே இருப்பார்கள்; உத்தியோக வேட்டைக்காரர்கள் இருக்க மாட்டார்கள். சுயேச்சை ஏற்படும் வரை, அல்லது ஒற்றுமை ஏற்படும் வரை, சிறுபான்மையோருடன் போட்டி போட்டுக் கொண்டு, உத்தியோகங்களை நாடி காங்கிரஸ் செல்லாது. அதிருஷ்ட வசமாக, காங்கிரஸ், இப்பொழுது சட்டசபைகளுடன் எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்ளவில்லை. இவைகளே வகுப்பு வேற்றுமைகளுக்கு நிலைக்களன்களாயிருந்தன. இப்பொழுது, காங்கிரஸில் ஹிந்துக்கள் பெரும்பான்மையோராக இருக்கின்றனர் என்பது உண்மைதான். ஆனால் காங்கிரஸ் ஹிந்துக்கள், வகுப்புவாத புத்தியுடன் விஷயங்களைக் கவனியாமல், எல்லாச் சமூகத்தாரும் சேர்ந்தே ஒரு நன்மையை அடையவேண்டுமென்று எண்ணி அதன்படி நடந்து வருவார்களானால், மற்ற முஸல்மான்கள், சீக்கியர்கள், பார்சிகள், கிறிஸ்தவர்கள், யூதர்கள் முதலிய இந்தியாவில் வசிக்கும் அனைவருடைய சந்தேகங்களும் தீர்ந்துபோகும். காங்கிரஸ், இந்த இலட்சியத்தை அடைகிறதோ இல்லையோ, என்னுடைய வழி தெளிவாக இருக்கிறது. எல்லாச் சமூகத்தாரும் ஒற்றுமையாயிருக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் நான் இளமையிலிருந்து வேலை செய்து கொண்டுவந்திருக்கிறேன். 1889-ம் ஆண்டில் என் இளமையில் நான் லண்டன் சென்ற போது, இதே எண்ணத்தையே கொண்டிருந்தேன். 1893-ம் ஆண்டில் நான் தென்னாப்பிரிக்கா சென்ற போது, என்னுடைய வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் இந்த நோக்கத்துடனேயே வேலை செய்தேன். இந்த உலகமே என் வசப்பட்டு விட்டபோதிலும், எல்லாச் சமூகத்தாரிடத்தும் நான் வைத்திருக்கும் அன்பை இழந்து விடமாட்டேன். இப்பொழுது, நடைபெறப்போகும் போராட்டம், வகுப்புவாதத்தினின்று தேசத்தின் கவனத்தைத் திருப்பி, எல்லா இந்தியர்களுக்கும் பொதுவான விஷயங்களிலேயே கவனத்தைச் செலுத்துவதாயிருக்கும்.

வினா:— அப்படியானால், பிரிட்டிஷாருக்கு விரோதமாக நீங்கள் ஒரு படையை எழுப்புவீர்கள் போலும்!

விடை:— ஒரு காலுமில்லை. அஹிம்சா தர்மத்தில் நான் கொண்டிருக்கும் பற்றானது எல்லாவற்றையும் கடந்தது; சத்தியத்தில் நான் கொண்டிருக்கும் பற்றுக்குச் சமமானது. இந்த அஹிம்சையின் மூலமாகவே, நான் சத்தியத்தைப் பார்க்கவும் அதனை அடையவும் கூடும். எனக்கு மதவேற்றுமை எப்படி இல்லையோ அப்படியே சமூக வேற்றுமையும் எனக்கு இல்லை. இந்தியர்



களிடத்தில் எனக்கு எப்படி அன்பு இருக்கிறதோ அப்படியே ஆங்கிலேயரிடத்தும் எனக்கு அன்பு இருப்பதனாலேயே, இக்தப் போராட்டத்தில் நான் இறங்குகிறேன். நான் துன்பஞ் சகித்தலினால், ஆங்கிலேயர்களை என் வசப்படுத்த முயற்சி செய்கிறேனே தவிர, அவர்களை அழிக்க முயற்சி செய்கிறேனில்லை.

வினா:— அநுபவ மார்க்கத்திலீடுபட்டிருக்கும் இந்த உலகத்தில் உங்கள் ஏற்பாடுகள் யாவும் வெறும்பிரமைகளாக முடியலாமன்றோ?

விடை:— அப்படியும் ஆகலாம். இங்ஙனம் கூறப்படுவது எனக்குப் புதிதல்ல. இதற்கு முன் எனக்கு நேரிட்ட பிரமைகள் எனக்கு நல்ல பயனைத் தந்திருக்கின்றன. இந்தக் கடைசிப் பிரமை என்னைத் தவறவிடாதென்று கருதுகிறேன். அப்படித் தவறினால், அதனால் எனக்கும் என்னைச் சார்ந்தவர்களுக்கு மட்டுமே தீங்கு உண்டாகும். என்னுடைய பிரமையை அதிகாரிகள் அறிந்து கொண்டிருப்பார்களானால், என்னுடைய பிரதேசம் அவர்கள் வசத்தில் இருக்கிறது. நான் தொடங்கப்போகும் இயக்கத்தின் பயனாக, எந்த இங்கிலீஷ் காரருக்கேனும், இப்பொழுதுள்ளதை விட அதிகமான ஆபத்து ஏற்படும் பட்சத்தில், இந்தியாவின் எந்தப் பாகத்தில் நடைபெறும் கலகத்தையும் அடக்க அரசாங்கத்திற்குச் சக்தி இருக்கிறது. எல்லா அரசியல் வாதிகளும், பத்திரிகாசிரியர்களும், எனக்குக் கடிதங்கள் எழுதுவதைவிட, அதிகாரிகளுக்கு எழுதி, தற்போதுள்ள குறைகளை நீக்குமாறு செய்வார்களானால், எந்த இயக்கமும் நடைபெற வேண்டிய அவசியமில்லை.

## ஸ்ரீமதி மீராபாயும் ஹிந்து மதமும்

சென்ற வாரத்து "யங் இந்தியா" பத்திரிகையில் மகாத்மாகாந்தி பின்வருமாறு எழுதுகிறார்:—

சபர்மதி ஆசிரமத்தில் மீராபாய் என்று அழைக்கப்படும் மிஸ் ஸ்லேட் என்ற ஐரோப்பியமாது, ஹிந்துமதத்தைத் தழுவிவிட்டதாகப் பிரிட்டிஷ் பத்திரிகைகளில் ஒரு செய்தி காணப்படுகிறது. அவர் ஹிந்துமதத்தைத் தழுவவில்லை யென்று நான் கூறுகிறேன். அவர் நான்கு வருஷங்களுக்குமுன் ஆசிரமத்திற்கு வந்தார். அப்பொழுதைவிட இப்பொழுது அவர் சிறந்த கிறிஸ்தவராக இருக்கிறார் என்று நம்புகிறேன். அவர் அதிக வயதாகாத சிறு பெண்ணல்ல. முப்பது வயதுக்கு மேற்பட்டவர். அவர் தனியாகவே, எகிப்து, பாரசீகம், ஐரோப்பா முதலிய தேசங்களில் சுற்றுப்பிரயாணஞ் செய்திருக்கிறார். என் வசத்தில் முஸல்மான், பார்சி, கிறிஸ்தவ மைனர்கள் வளர்ந்து வந்திருக்கிறார்கள். அவர்கள் ஹிந்துமதத்தைத் தழுவவேண்டுமென்ற கருத்துடன் அவர்களுக்கு எப்பொழுதும் ஹிந்து மதம் போதிக்கப்பட்டதில்லை. தங்கள் மதக் கிரந்தங்களைப் பக்தியுடன் படிக்குமாறே அவர்கள் தூண்டப்பட்டார்கள். பிறமத நூல்களை பக்தியுடனும், நல்லெண்ணத்துடனும் வாசித்தால் தங்களுடைய சொந்த மதத்தின் கொள்கைகளை முன்னைக்காட்டிலும் நன்றாகத்தெரிந்துகொண்ட ஸ்திரீ புருஷர்கள் பலரை நான் அறிவேன். இப்பொழுது சபர்மதி ஆசிரமத்தில் பலவித மதஸ்தர்கள் இருக்கிறார்கள். தம் மதம் சேர்ப்பித்தல் என்ற வழக்கம் ஆசிரமத்தில் கிடையாது. அஃது அநுமதிக்கப்படுவதுமில்லை. எல்லா மதங்களும் உண்மையானவை யென்றும் ஆண்டவனால் அருளப்பட்டவையென்றும் நாங்கள் அங்கீகரிக்கிறோம். மிஸ் ஸ்லேட் ஒரு ஹிந்து பெயரைத் தாங்கிக் கொண்டிருக்கவில்லை; ஆனால் ஓர் இந்தியப் பெயரையே தாங்கிக் கொண்டிருக்கிறார். இஃது அவருடைய யோசனையின் பேரிலேயே. சௌகரியத்தின் பொருட்டு ஏற்படுத்திக் கொள்ளப்பட்டது. இதே மாதிரி வேறு பலருக்கும் மாறு பெயர்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ ரிச்சர்ட்கிரெக் என்பார் கிறிஸ்தவ மதத்தை விட்டு விடவில்லை. ஆனால் அவர் ஆசிரமத்தில் கோவிந்தஜி என்றழைக்கப்பட்டார். இப்பொழுது லௌத் என்ற பிரதேசத்தில் வசிக்கும் மிஸ் ஆடாவெஸ்ட் என்பார் போனிக்ஸ் ஆசிரமத்தில் தேவி பென் என்றே அழைக்கப்பட்டார்.

## நான் கைது செய்யப்பட்டால்—?

### மகாத்மா காந்தியின் வேண்டுகோள்

'நவஜீவன்' பத்திரிகையில் மகாத்மா காந்தி பின்வருமாறு எழுதுகிறார்:—

நான் சட்டமறுப்பு இயக்கத்தைத் தொடங்கியதும், அரசாங்கத்தார் என்னைக் கைது செய்யாமலிருக்கமுடியாது. 1922-ம் வருஷம் கைது செய்யப்பட்டபோது, ஹர்த்தால் செய்ய வேண்டாமென்றும் வேறெவ்வித கிளர்ச்சியும் வேண்டா மென்றும், நிர்மாண வேலையைச்செய்து வருமாறும் என் சகோதர தொண்டர்களுக்குச் சொல்லி வந்தேன். இப்பொழுது நான் கைது செய்யப்பட்டால், அதே மாதிரி, நிர்மாண வேலைகளைச்செய்து கொண்டுவரவேண்டும். மற்றும் அஹிம்சா தர்மத்தை மதமாக நம்புகிற ஒவ்வொருவரும், தமது திறமைக்குத் தக்கபடி சட்டமறுப்பு இயக்கத்தில் சேர்ந்து கொள்ளவேண்டும். ஒவ்வொருவரும் தத்தமது இஷ்டப்படி சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்கமுடியாது. தான் அஹிம்சாவாதி என்பதில் தன்னம்பிக்கை கொண்டோர், தமது கருத்துக்களைத் தமது ஜில்லா அல்லது மாகாணக்காங்கிரஸ் தலைவருக்குத் தெரியப் படுத்தவேண்டும். அந்தத்தலைவர் ஏதேனும் சட்டமறுப்புச் சம்பந்தமான இயக்கத்தைத் தொடங்குவாரானால், அதில் கலந்துகொண்டு, தாம் சிறைக்கு வெளியிலிருக்கும் வரை, தம்மாலான தியாகங்களைச் செய்யலாம். சத்தியாக்கிரகிகள், அழைக்கப்பட்டால் இவர்களுக்கு உதவியாக இருந்து வேண்டுவன செய்யலாம். அழைக்கப்பட்டாலன்றி எவரும் எதையும் ஆரம்பிக்கக் கூடாது.

நான் இப்பொழுது, சபர்மதி ஆசிரமவாசிகளைக்கொண்டும், அந்த ஆசிரம ஒழுங்குக்கு உட்பட்டு, அதில் நம்பிக்கை கொண்டுள்ளவர்களைக்கொண்டுமே சட்டமறுப்பு இயக்கத்தைத் தொடங்கப்போகிறேன். தற்போது முக்கியமான சத்தியாக்கிரகிகளைக் கூட இதில் சேர்த்துக்கொள்ளப் போவதில்லை. என்னையும் ஆசிரமவாசிகளையுமே இந்த யுத்தத்தில் பரிசோதனைக்கு விட உத்தேசிக்கிறேன். நண்பர்களும், பொதுஜனங்களும் என்னிடத்திலும் ஆசிரம வாசிகளிடத்தும் வைத்திருக்கும் நம்பிக்கைக்கு நாங்கள் தகுதியுடையவர்களாவென்பது பரிசோதிக்கப்படவேண்டிய காலம் வந்துவிட்டதென்று நான் கருதுகிறேன். பதினைந்து வருஷப் பயிற்சிக்குப் பிறகு, எங்களுக்கு இந்தத் தகுதி ஏற்படவில்லையானால், ஆசிரம வாசிகளுடையவும் என்னுடையவும் தன்மையை உத்தேசித்து, நாங்கள் இல்லாமற் போவதே சிறப்புடையதாகும்.

நான் கைது செய்யப்பட்ட பிறகு, முக்கியமாகப் பாதுகாக்கப்பட வேண்டுவது பலாத்காரமேயாகும். பலாத்காரம் தோன்றும் இடங்களில் அதைத் தடுக்கும் முயற்சியில் இறந்துபோகவும் சத்தியாக்கிரகி தயாராயிருக்க வேண்டும். இந்த நிபந்தனையுடன் போராட்டம் நடைபெற்றுக் கொண்டே போக வேண்டும்.

இப்பொழுது தொடங்கப்படும் யுத்தம் நீடித்து நடைபெறுமோ அல்லது சீக்கிரத்தில் முடிந்து போகுமோ தெரியாது. ஆனால் இதுவே கடைசி யுத்தமாகும். இஃது ஆண்டவன் வசத்தில் இருக்கிறது. இனித் தள்ளிவைக்க வேண்டுவது எதுவுமில்லை. இந்தப் போராட்டத்தில், தேசத்தார் அனைவரிடமிருந்து, முக்கியமாக குஜராத் வாசிகளிடமிருந்து நான் அதிகமான தியாகத்தை எதிர்பார்க்கிறேன்.

---

## ஒரு மிதவாதப் பத்திரிகையின் எச்சரிக்கை

அலகாபாத்தில் வெளியாகும் 'லீடர்' பத்திரிகை தன் தலையங்கத்தில் பின் வருமாறு குறிப்பிடுகிறது:—

இந்தியாவில் பகுத்தறிவு வாய்ந்தவர்களும், அநுபவசாலிகளுமான அரசியற்காரர்கள், சுயேச்சைக்கோரிக்கையை எதிர்க்கிறார்கள் என்பது லார்ட் இர்வினுக்கும் ஸ்ரீமான் வெட்ஜ்வுட்பென்னுக்கும் தெரியும். ஆனால் இந்தியா அரசாங்கத்தில் அநுசரிக்கப்படும் பிற்போக்கான கொள்கைகளே இதற்கெல்லாம் காரணம் என்பதை அந்த அதிகாரிகள் எவ்வளவு தூரம் உணர்ந்திருக்கிறார்களோ நாமறியோம். சுயேச்சைக் கோரிக்கைக்கு ஆதரவு பெருகி வருவதற்குக் காரணம், அரசாங்கத்தாருடைய கொள்கைகள், செயல்கள், பேச்சுகள் முதலியவைகளே காரணமென்பதை உணர்ந்து கொள்ளாமற் போனால், அவர்கள் புத்தி சாலித்தனமாக நடந்து கொண்டவர்களாக மாட்டார்கள். குடியேற்ற நாட்டந்தஸ்துக் கொள்கையில் நம்பிக்கை கொண்டவர்கள் சுயேச்சைக் கோரிக்கையை எதிர்க்க வேண்டியது அவசியமாகும். அப்படியே அவர்கள் எதிர்த்தும் வருகிறார்கள். ஆனால் அரசாங்கத்தாருடைய தற்போதைய கடமை யென்னவென்றால், மேற்படி இயக்கத்தைத் தடுக்கும் முறையில் தங்கள் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் திருத்திக்கொள்ள வேண்டும்; மேற்படி இயக்கத்திற்குப் பலந் தரும்படியாக நடந்து கொள்ளக்கூடாது. சட்ட வரம்புக்குட்பட்டே ஜனங்கள் நடந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தைப் பரப்புவோருக்கு அரசாங்கத்தார் துணை செய்யவேண்டிய காலம் இதுவேயாகும்.

## சைவ மங்கையர் மகாநாடு

(ஒரு நிருபரிடமிருந்து)

இத்தலைப் பெயர் பூண்ட மகாநாடு பிப்ரவரி மாதம் 22-ந் தேதி சனிக்கிழமை பிற்பகல் 3 மணிக்கு 150 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெருவில் கூடியது. ஏறக்குறைய 100க்கு மேற்பட்ட பெண்மணிகள் வந்திருந்தார்கள். இம்மகாசபைக்குச் சென்னை அரசாங்கத்துச் சுகாதார மந்திரி கனம் எஸ். முத்தையா முதலியார் அவர்களின் இல்லக்கிழத்தியார் ஸ்ரீமதி எம். இராஜம்மாள் அவர்கள் தலைமை வகித்தார்கள்.

இப்பெருங் கூட்டத்தைக் கூட்டுவதற்கு முன்னின்ற ஸ்ரீமதி பண்டிதை எஸ். கிருஷ்ணவேணி அம்மையார் சங்கத்தைக் கூட்டினதற்குரிய காரணங்களை விரித்துரைத்தார்.

அடியிற்கண்ட பெண்மணிகள் இச்சங்கத்தின் நோக்கத்தைப்பற்றி அவரவர்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்து ஏற்படுத்தவேண்டிய முறைகளைக் கூறினார்கள்:—

1. ஸ்ரீமதி கே. கிருஷ்ணவேணியம்மாள்-சமயக்கல்வி.
2. இச்சபைக்கு வந்திருந்தவர்களில் சிலர் கேட்ட ஐயவினாக்களுக்கு ஸ்ரீமதி பண்டிதை எஸ். கிருஷ்ணவேணி அம்மாளவர்கள் பொருந்திய விடை கூறி மகிழ்வித்தார்கள்.
3. ஸ்ரீமதி புவனேஸ்வரி யம்மாள்-அங்கத்தினர்களின் சேர்க்கை.
4. ஸ்ரீமதி இராஜம்மாள் - பெண்களின் முற்கால தற்கால நிலைமை.
5. ஸ்ரீமதி என். சண்பகம்மாள் - வீடுகள் தோறும் சென்று, வெளிவராத பெண்களுக்குப் பாடம் கற்பித்தல்.
6. ஸ்ரீமதி செல்லம்மாள்-கல்வி.
7. ஸ்ரீமதி ஏ. நாராயணியம்மாள் - தமிழ்க் கல்வி.
8. ஸ்ரீமதி டி. பதுமலோசனியம்மாள்-கைத்தொழில்.
9. ஸ்ரீமதி எம். துரையம்மாள், சங்கத்திற்குப் பண உதவி.

இச்சங்கத்தில் சந்தாதாரர்களாகச் சேர விரும்புகிறவர்கள் 4 அணா கொடுத்து சமாஜ அங்கத்தவர் ஆகலாம் என்றும் அவர்கட்கு "சித்தாந்தம்" பத்திரிகை இலவசமாக அனுப்பப்படும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. அப்பொழுதே சில அங்கத்தினர்களும் சேர்ந்தார்கள். இன்னும் சேர விரும்புகிறவர்கள் அடியிற் கண்ட விலாசத்திற்குத் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்ளப் பட்டார்கள். விலாசம்: எஸ். கிருஷ்ணவேணி யம்மாள், இந்து நிலயம், 33/35 சிங்காராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை. வந்த சபையோர்களால் கீழ்க்குறிக்கப்பட்ட பெண்மணிகள் நிர்வாக அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்:—

தலைவியார்:—ஸ்ரீமதி பண்டிதை எஸ். கிருஷ்ணவேணியம்மாள்.

காரியதரிசிகள்:—ஸ்ரீமதிகள் நீலாயதாக்ஷியம்மாள், வேதவல்லியம்மாள்.

### வாரந்தோறும் பாடம் கற்பிப்பவர்கள்

தமிழ்-ஸ்ரீமதி ஏ. நாராயணியம்மாள்.

தெலுங்கு-ஸ்ரீமதி ஆண்டாளம்மாள்.

வடமொழியும் ஹிந்தியும்-ஸ்ரீமதி லக்ஷ்மியம்மாள்.

கைத்தொழிலும் சங்கீதமும்-ஸ்ரீமதி கே. சரஸ்வதியம்மாள்.

கதை படித்தல்-ஸ்ரீமதிகள் சிவஞானம்மாள், இராஜம்மாள், புஷ்பாவதியம்மாள்.

வீடுதோறுஞ் சென்று பாடம் கற்பித்தல்-ஸ்ரீமதி ப. தனம்மாள்.

தேவாரம் கற்பிப்பவர்-ஸ்ரீமதி தேவார இராஜம்மாள்.

மேற்குறிக்கப்பட்ட பாடங்கள் வாரம் ஒருமுறை சனிக்கிழமை பிற்பகல் 2 மணி முதல் 4 மணிவரை 150 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெருவில் போதிக்கப்படும். படிக்க விருப்பமுடையவர்கள் சங்கத்தலைவிக்குத் தெரிவிக்க விரும்புகிறோம்.

சங்கத் தலைவியாரால் அக்கிராசனாதிபதி அவர்கட்கும் வந்த சபையோர்கட்கும் வந்தனம் கூறியதுடன் அவர்கள் விருப்பத்திற்கிணங்கி இடவசதியும் மற்றும் பல வசதிகளையும் அன்புடன் உதவிய சைவ சித்தாந்த மகாசமாஜக் காரியதரிசியார் அவர்கட்கும் அச்சபையினர்களுக்கும் வந்தனம் கூறப்பட்டது.

பன்னீர், சந்தனம், தாம்பூலம், கற்கண்டு முதலியவைகள் வழங்கப்பட்டுச் சுமார் 6 மணிக்குக் கூட்டம் முடிந்தது.

---

## ஜி. ஐ. பி. ரயில்வே வேலைநிறுத்தம்

ஜி. ஐ. பி. ரயில்வே தொழிலாளர் வேலை நிறுத்தம் நடைபெற்று வருகிறது. தொழிலாளர்கள் ஊக்கத்தைக் குன்றச் செய்ய ரயில்வே அதிகாரிகள் பல காரியங்களைச் செய்து வருகின்றனர். தொழிலாளர் வசிக்குமிடங்களிலுள்ள குழாய்களில் தண்ணீர் வாராதபடி தண்ணீர் வசதிகளை நிறுத்தி விட்டதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் தொழிலாளர்கள் கஷ்டங்களைப் பொறுத்துக் கொண்டு இருப்பது மாத்திரமன்றி, வேலை நிறுத்தத்திலும் மிகவும் உறுதியுடனிருக்கிறார்கள்.

பம்பாய் பி. பி. ஸி. ஐ. ரெயில்வே ஊழியர் சங்கத்தின நிர்வாகக் கூட்டம் ஜி. ஐ. பி. வேலை நிறுத்த நிதிக்கு முதல் தவணையாக ஆயிரம் ரூபா கொடுக்கும்படி தீர்மானித்தது. அச்சங்கம் ரயில்வே ஊழியர் அனைவருக்கும் வெளியிட்டிருக்கும் ஓர் அறிக்கையில், வேலை நிறுத்த தொழிலாளர்கள் நிதிக்குப் பணந் திரட்ட தொழிலாளர் தொண்டர்கள் வேண்டுமென்று குறிப்பிட்டிருக்கிறது.

ஜி. ஐ. பி. வேலை நிறுத்த நிலை குறித்து யோசிக்க அகில இந்திய ரெயில்வேத் தொழிலாளர் சங்கங்களின் ஐக்கிய சபையின் பொதுக்கூட்டம் 23-2-30 பிற்பகல் ஸ்ரீமான் எஸ். ஸி. ஜோஷி தலைமையில் நடைபெற்றது. அதுபோது ஐக்கியசபையின் பொதுக்காரியதரிசியான ஸ்ரீமான் வி. வி. கிரி தற்போதைய வேலை நிறுத்த நிலையை விளக்கினார். பெருத்த வாதங்களுக்குப்பின்னர் எல்லா ரெயில்வே தொழிலாளர் சங்கங்களும்வேலைநிறுத்தக்காரர்களுக்குஉதவிசெய்யும்படி கேட்டுக்கொள்கிறதென்றும், ரெயில்வே அதிகாரிகள் தண்ணீர் வசதியை நிறுத்தல், புதிதாக ஆட்கள்சேர்த்தல் முதலியவைகளைக் கண்டிக்கிறதென்றும், இது சம்பந்தமாக ரயில்வே போர்டாரும், அரசாங்கத்தாரும் ஒன்றும் கவனியாமலிருப்பது கண்டிக்கத் தக்கதென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# பெரிய புராணம்

திருவாளர் சி. கே. சுப்பிரமணிய முதலியார் சொற்பொழிவு

'பெரிய புராணம்' என்ற பொருள் பற்றிச் சென்னைச் சர்வகலா சங்கத்தின் ஆதரவில் பச்சையப்பன் கல்லூரியில் கோவை சைவத் திருவாளர் வழக்கறிஞர் சி. கே. சுப்பிரமணிய முதலியார் பி. ஏ. அவர்கள் 31-1-1930 1, 3-2-1930 ஆக மூன்று நாட்களிலும் நிகழ்த்தியமூன்று சொற்பொழிவுகளின் சுருக்கம் வருமாறு:—

1. முதற் பிரசங்கம்:— பெரிய புராணம். அதன் ஆசிரியரும் அவர் காலமும். The author & his times.

2. இரண்டாவது பிரசங்கம்:— பெரிய புராணமும் அதன் கலைஞானங்களும். Its cultural value.

3. மூன்றாவது பிரசங்கம்:— பெரிய புராணம் கவிச் சிறப்பும் பயனும். Its literary and philosophical value.

### பெரிய புராண ஆசிரியரும் அவர் காலமும்

பெரிய புராணத்தைத் தமிழரும் சைவரும் பிற நாட்டவர்களும் பற்பல வாறு உணர்ந்து அனுபவிக்கின்றார்கள். அதைப் பற்றிப் பற்பல மாறுபட்ட அபிப்பிராயங்களும் வெளியிடப்படும் இக்காலத்தில் அதைப்பற்றிய ஆராய்ச்சி செய்ய வேண்டுவது கடமையே. அருண் மொழித் தேவர் என்னும் சேக்கிழார் சுவாமிகள் பெரிய புராணத்தின் ஆசிரியராவர். அவர் சரிதத்தைப்பற்றி அறிவதற்கு உமாபதி சிவாசாரியார் செய்தருளிய திருத்தொண்டர் புராண வரலாறு மிக உதவி புரிகின்றது.

### சரிதம்

அப்புராணத்தில் அறிந்த வகையில் சேக்கிழார் சுவாமிகள் சரிதச் சுருக்க மாவது:— சான்றோருடைத் தென விளங்கு ஓகப்பெற்ற தொண்டை நன்னாட்டிலே உள்ள 24 கோட்டங்களில் ஒன்றாகிய புலியூர்க் கோட்டத்திலே,குன்றத்தூர் நாட்டிலே,குன்றத் தூரிலே, வேளாளர் மரபிலே சேக்கிழார் என்ற குடி சிறப்பாய் விளங்கியது. அந்தக் குடியின் குல தீபம் போலே அருண் மொழித்தேவர் என்ற பெரியார் அவதரித்தார். இவர் இளமையிலே பல கலைகளிலும் வல்லவராய் அறிவின் முதியவராய் விளங்கி செய்திகேட்டு, அந்நாள் நாடாண்ட அநபாயச் சோழச் சக்ரவர்த்தி இவரை வரவழைத்து இவரது மேம்பாட்டைக் கண்டு இவர்க்கு 'உத்தமச் சோழப் பல்லவர்' என்ற பட்டங் கொடுத்து இவரைத் தம்மிடத்தே முதன் மந்திரியாராய் அமர்த்திக் கொண்டார்.

உத்தமச் சோழப் பல்லவர் என்பது பல்லவர்களை ஜெயித்த சோழ அரசரால் உத்தமர் என்று தெரிந்து கொடுத்த பட்டம் எனப் பொருள் தர நிற்கிறது. இது போலவே மாணிக்க வாசக சுவாமிகளுக்குப் பாண்டியர் தந்த 'தென்னவன் பிரம ராயன்' (பாண்டியன் தந்த அறிவுக்கரசன்) என்ற அமைச்சர் பட்டத்தின் பொருளையும் ஆராய்ந்தால் இது அக்கால வழக்கென்று விளங்குகிறது. இவர் சோழ நாட்டிலே உள்ள திரு நாகேசுரம் என்ற தலத்திலே மிகுந்த பக்தியுடையவராய் அதனைத் தமது ஆன்மார்த்த தலமாகக் கொண்டு வழிபட்டு வந்தார். அந்த அன்பு மேலீட்டினாலே அதற்கு அறிகுறியாகத் தமது குன்றத் தூரிலே ஒரு கோயிலும் அதைச் சுற்றித் திரு மடவளாகமும் அமைத்து அதற்குத் திரு நாகேசுரம் என்று பெயரிட்டார். அமைச்சராய் அரசாங்கம் நடத்திவரு நாளில் அரசர் தமது சபையத்தில் சிற்றின்பப் பகுதி நிறைந்ததாகிய சீவக சிந்தாமணி என்ற சமண நூலைப் பாராட்டிப் படித்து மகிழ்ந்து வந்ததைக் கண்டார். அது போலவே அந்நாளில் சீவக சிந்தாமணியும் பிற சமணர்களின் நூல்களும் நாட்டில் பரந்து நாட்டவர்களது மனதை உத்தமமாகிய சைவ நெறியிலிருந்து பிறழவைத்து வந்த நிலையையும் கண்டார். அரசரை நோக்கி நீர் விரும்பிப் பாராட்டி வரும் இது சமண நூல்; இம்மைக்கு மாகாது; மறுமைக்கும் ஆகாது. இதை விட்டு உத்தமமாகிய சிவ கதைகள் உண்டு. அவற்றைப் பயின்றால் இம்மை மறுமை வீடு என்ற மூன்று பலனும் கிடைக்கும். அதை விட்டு இப் பொய் நூல் கற்றுப் பொழுது போக்குதலானது கரும்பிருக்க இரும்பு கடித்தலும், விளக்கிருக்க மின்மினித் தீக்காய்தலும் போல உள்ளதே யாகும் என்ற அறிவுறுத்தினர். அரசர் இது கேட்டு வியந்து 'அப்படியாயின் அந்தச் சிவ கதைகள் யாவை? அவற்றைச் சொல்லுங்கள்; கேட்போம்' என்று கேட்க, அருண் மொழித் தேவர் அவைகள் தாம் சிவன் அடியார்களின் சரிதைகளாகும். அவர்களைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத் தொண்டத் தொகையிலே தொகுத்துத் துதித்தருளினர். திரு நாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரின் அருள் பெற்ற நம்பியாண்டார் நம்பிகள் தமது கலித்துறைத் திருத் தொண்டர் திரு வந்தாதியிலே அச் சரித்திரங்களை விரித்து உரைத் தருளினர் என்று அச் சரித்திரங்களைச் சொன்னார். அது கேட்ட அரசர் வியந்து நாங்கள் அற்புத மெய்ப் பொருளை முறையே இச்சரிதங்களை ஒரு காப்பியமாகச் செய்து தருதல் வேண்டுமென்று வேண்டினர். அருள் மொழியார் அதற்கு இசைந்து அவரியம் விடை பெற்று அதன் பொருட்டுத் திருத் தில்லைக்குச் சென்றார். அரசர் அவர்க்கு வேண்டிய பரிசனங்கள் முதலிய வசதிகள் எல்லாம் செய்து தந்தார். அருண் மொழித் தேவர் தில்லையிலே சென்று ஸ்ரீ நடராஜரை வணங்கிப் பெருமானே! உனது அடியார் பெருமை அறிதற் கரியது. அதனை எடுத்துச் சொல்ல அடியேனுக்குத் துணை செய்து அருள் புரிதல் வேண்டும் என்ற பிரார்த்தித்து நின்றார். அப்போது 'உலகெலா முணர்ந் தோதற் கரியவன்' என்று ஆகாயத்திலே அனைவரும் கேட்க ஒரு திருவாக்கு எழுந்தது. அவ்வாறு இறைவன் எடுத்து அருளிய முதலை முதலாக வைத்துக்கொண்டு அருண் மொழித் தேவர் தில்லையில் இருந்துகொண்டு சில காலத்தில் இப்புராணத்தை இயற்றி முடித்தார். இரண்டு காண்டமாகவும் 13 சருக்கங்களாகவும் வகுக்கப் பெற்று 4253 செய்யுள்களில் அது முடிந்தது. புராணம் எப்போது முடியுமென்று ஆவலுடன் எதிர்பார்த்திருந்த அரசர் அது நிறைவெய்தியது கேட்டவுடன் மிக மகிழ்ந்து தமது சேனை முதலிய பரிசனங்களுடன் சிதம்பரத்துக்கு வந்து சிவ வேடப் பொலிவுடன் விளங்கிய அருண் மொழித் தேவரைக்கண்டு வணங்கினர். தம்மை எதிர் கொண்ட தில்லைவாழந்தணர்கள் மடாதிபதிகள் முதலிய அனைவர்களுடன் அரசர் ஸ்ரீ நடராஜரைத் தரிசித்தார். அப்போது 'அரசனே, உலகெலாம் என்று நாம் அடி எடுத்துக் கொடுக்க நமது அன்பன் சேக்கிழான் நமது திருத்தொண்டர் புராணத்தைப் பாடி முடித்திருக்கிறான். நீ அதை விசாரவில் விரும்பிக் கேட்பாயாக' என்ற ஒலி ஆகாயத்திலே அனைவரும் கேட்க எழுந்தது. இறைவன் திருப்பாதத் தணிந்த திருச்சிலம்பு ஒலியும் உடனே கேட்டது. அரசரும் தில்லைவாழந்தணர்களும் மகிழ்ந்து அந்தப் புராணத்தை வாசித்துப் பொருள் செய்யுமாறு சேக்கிழாரை வேண்டினார்கள்.

அரசர் பல ஊர்களுக்கும் ஓலை போக்கிப் பல சிற்றரசர்களையும் ஏனைய அன்பர்களையும் இது கேட்க வரவழைத்து அனைவர்க்கும் உண்டி உறையுள் முதலியன எல்லா வசதிகளையும் செய்யும் தில்லைவாழந்தணர்களுக்கும் மடாதிபதிகளுக்கும் தினமும் படியமுது ஏற்படுத்தினர். ஸ்ரீ நடராஜருக்கு நித்திய மூர் விசேட பூசை நியமித்தார். ஆயிரக்கால் மண்டபத்திலேயிருந்து கொண்டு சேக்கிழார் சித்திரை மாதத்துத் திருவாதிரையிலே புராணம் வாசித்துப் பொருள் சொல்லத் தொடங்கி அடுத்த சித்திரைத் திருவாதிரையிலே நிறைவேற்றி முடித்தார். அரசர் தம்முடைய சபையினரோடு இருந்து கேட்டனர். நிறைவேறினவுடன் அந்தப் புராணத்தை நடராஜா சந்நிதியில் அறுகாம் பீடமிட்டு அதன் மேல் பசும்பட்டு வெண்பட்டு இட்டு அதன் மேல் வைத்துத் தில்லை வாழந்தணர்கள் சிவ மூல மந்திரத்தாலே பூசித்தார்கள். அதன் பின் பொன் தாம்பாளத்திலே அதை வைத்து யானைச் சிரத்திலே எழுந்தருளுவித்துச் சேக்கிழாரையும் ஏற்றி அரசர் தாமும் ஏறிப் பின்பாகஇருந்து கொண்டு தமது இரண்டு கைகளாலும் சாமரை வீசிக் கொண்டு நகர்வலம் செய்வித்து 'இதுவன்றோ நான் செய்த தவப் பயன்' என்று மகிழ்ந்தார். நகர் வலத்தின் பிறகு நடராஜர் சந்நிதியில் வைத்து அதனைச் செப்பேடு செய்து இதற்குமுன் இராச ராச சோழ தேவர் காலத்திலே நம்பி யாண்டார் நம்பிகளால் வகுக்கப் பெற்றிருந்த பதினொரு திரு முறைகளுடன் இதனைப் பனிரண்டாவது திருமுறையாகச் சேர்த்துச் சைவத்திருமுறைகள் பனிரண்டாகும் என்று கோவை செய்து சேக்கிழார் பெருமானுக்குத் தொண்டர் சீர் பரவுவார் என்ற பெயரும் ஞான முடியும் சூட்டி அரசர் வணங்கினர். சேக்கிழார் அதன் பின் தில்லையிலேயே தங்கிப் பெரிய புராணத்திலே உள்ள அடியவர் கதைகளைச் சிந்தித்து உணர்ந்து கொண்டு நிட்டை கூடி இறைவன் திருப்பாத நீழலடைந்தனர். அரசர் இவரது தம்பியாராகிய 'பாலறு வாயர்'ரை விசாரித்து அவர் தமது பெயராலே குன்றத்தூரிலே 'பாலறு வாயர் குளம்' என்ற ஒரு குளம் உண்டாக்கித் திருநாகேசுரத்திலே திருப்பணி செய்து கொண்டிருந்தது கேள்வியுற்று அவரைத் தமது மந்திரியாராக ஆக்கிக் கொண்டார். அவர்க்குத் 'தொண்டைமான்' என்ற பட்டமும் கொடுத்தார். அவர் தமது ஊரிலே இருந்தபடியே அரசு செய்தமையாலே 'தொண்டைமண்டல நின்று காத்த பெருமான்' என்ற சிறப்பு பெயர் வழங்கிற்று. இதுவே உமாபதியார் செய்து தந்த சேக்கிழார் வரலாறாகும்.

### சரித ஆராய்ச்சி

சேக்கிழார் சுவாமிகள் காலத்துக்குச் சுமார் இருநூறு ஆண்டுகளின் பின் வாழ்ந்த சைவ சமய சந்தான ஆசாரியர்களில் ஒருவரான உமாபதி சிவாசாரியரால் இவ்வரலாறு நமக்குக் கிடைத்தது, தமிழும் சைவமும் செய்த பெரும் பாக்கியமே. தமிழ்க் கவி வாணர்களிலே தமது சரிதம் நம்பும் வகையில் எழுதப் பெற்றோர் நமது சேக்கிழார் சுவாமிகள் ஒருவரே யென்று சொல்லலாம். இச்சரிதம் ஏறக்குறைய முழுதும் நமக்குக் கிடைக்கும் பிற சாதனங்களாலே உறுதி பெறுகின்றது. புலியூர்க் கோட்டமும் குன்றத்தூரும் இன்றைக்கும் அப்பெயராலே நிலவுகின்றன. குன்றத்தூருக்கு அப்பெயர் வந்ததற்குக் காரணமாகிய குன்றமும் அதில் விளங்கும் முருகன் ஆலயமும் இன்றும் நாம் சென்று கண்ணுக்கினிய காட்சியாகக் காணத்தக்கன. குன்றத்தூரிலும் பிற ஊர்களிலும் வேளாளர் மரபில் சேக்கிழார் குடியும் இப்போதும் இருக்கிறது. பாலறு வாயர் குளமும் இன்றைக்கும் காண்போம். ஆனால் அதைச் சனங்கள் பல்லவராயர் சேணி என மருவி வழங்குகிறார்கள். சேக்கிழார் தமது ஆன்மார்த்தமாய் அமைத்த திருநாகேசுவரக் கோயிலும் இன்றைக்கும் நாம் கும்பிடக் கூடியதாய் விளங்குகிறது. இவ்வூரிலே சேக்கிழார் சுவாமிகளுக்கு ஒரு சிறு கோயிலும் இருக்கிறது. அநபாயன் அரச சபையான து இப்புராணத்துறையினைக் கொண்டு விரும்பும் என்று சேக்கிழார் சுவாமிகளே புராணத்திலே பாயிரத்தில் பாடியிருக்கின்ற படியாலே அநபாயர் கேட்க, இவர் இதைப் பாடினர் என்பது தேற்றமாம். அநபாயர் காலத்திலே அவர் ஆதரவில் இந்நூல் இயற்றப்பெற்ற தென்பதற்கு மேலே குறித்த பாயிரச் செய்யுள் அல்லாமல் இனியும் பதினொரு இடங்களில் சுவாமிகள் அநபாயரைச் சுட்டிக் குறித்திருப்பது சான்றாகும். "கொற்றவன் அநபாயன் பொற்குடை நீழற் குளிர் வது சோழநாடு" என்று நாட்டுப் படலத்திலே குறிப்பதால் அப்போது சோழ நாடு அநபாயர் செங்கோலின் கீழ் வாழ்கின்றதென்பது துணிபாம். தில்லையிலே இப்புராணம் இயற்றினர் என்பதற்கு வேறு புறச் சான்றுகள் இப்போது கிடைக்கவில்லையாயினும் புராணத்தினுள்ளே எங்கெங்கே தில்லையைப் பற்றிப் பேச நேரிடுகிறதோ அங்கங்கெல்லாம் சேக்கிழார் சுவாமிகள் மிகச் சிறப்பித்து வர்ணித்து விரிவாகப் பேசியுள்ளதால் அங்கே தங்கி நடராசர் தமக்குச் செய்த பேரருளினாலே புராண மியற்றினர் என்று உறுதியாய் ஊகிக்கலாம். தில்லையைப்பற்றி வரும் நூற்றுக் கணக்கான இடங்களிலெல்லாம் சிறப்பு மொழிகளாகிய அடை மொழிகளும் சொற்றொடர்களும் காமல் தனியாக தில்லை என்று சேக்கிழார் கூறக் காணவில்லை. ஆனாக சீர்த்தில்லை, வீடருள் தில்லை, மல்லலம் பதி, தேனமைந்த மலர்ப் பொழிற் றில்லை என்றெல்லாம் காண்போம்.

உமாபதியார் சொல்லியன வற்றைத் தவிரச் சேக்கிழார் சுவாமிகள் சரிதத்தைப்பற்றிய வேறு குறிப்புகள் அநேகமாக ஒன்றும் கிடைக்கவில்லை. இவர் இளமையிலேயே கல்வியில் மேம்பட்டு விளங்கினர் என்பதற்கு அத்தாட்சியாக ஒரு சிறு சம்பவம் சொல்லப் பெறுகிறது. அதாவது, இவர் தந்தையார் அரச சபையில் ஒரு பெரிய உத்தியோகத்திலே அமர்ந்திருந்தார். ஒரு நாள் அரசன் அவரையும் ஏனையோரையும் பார்த்து மலையிற் பெரிது புவியிற் பெரிது கடலிற் பெரிது எவை? என்று சொல்லக் கேட்டு அதற்கு அடுத்த நாள் விடை சொல்ல வேண்டுமென்று விடுத்தான். அவர் வீட்டுக்கு வந்து அந்த சிந்தனையில் கவலைப்பட்டு ஆழ்ந்திருந்த போது அதை அறிந்த இளஞ் சேக்கிழார் மிக இலேசாக அதற்குத் திருக் குறளிலிருந்து மூன்று குறட் பாக்களால் விடை சொல்லித் தந்தையாரைத் தேற்றினர். அக் குறட்பாக்கள்,

> "நிலையிற் றிரியாது அடங்கியான் றோற்றம்
> மலையினும் மாணப் பெரிது"
>
> "காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்
> ஞாலத்தின் மாணப் பெரிது"
>
> "பயன்றூக்கார் செய்த உதவி நயன்றூக்கின்
> நன்மை கடலிற் பெரிது"

என்பன. இவ்வரலாறு கர்ண பரம்பரையாகக் கேட்கப் படுவதன்றி வேறு ஆதாரவுகள் கிடையா. சேக்கிழார் சுவாமிகளது வீடு இருந்த இடத்திலே தானே இப்போது அவரது ஆலயமும் அதைச்சுற்றிய தோட்டமும் அமைந்துள்ளன என்கிறார்கள். அன்றியும் அவர் மேற்படி கிராமத்தில் தமக்கு உள்ள மனைப்பகுதி இடத்திலே தானே திருநாகேசுரம் என்ற தமது ஆன்மார்த்த ஞாபகக் கோயிலை அமைத்தார் என்றும் கூறுவர். அன்றியும் தமது சொந்த விளைநிலங்கள் முழுவதையும் அந்த ஆலயப் பூசைக்கு நிபந்தமாக வைத்தார் என்றும் சொல்லுகிறார்கள். ஆனால் அவற்றின் விவரம் ஒன்றும் புலப்படவில்லை. குன்றத்தூர்க் குன்றின் அடிவாரத்தில் பாலறுவாயர் குளக்கரையில் பூர்வீகமான ஒரு பழைய சிவாலயம் உள்ளது. அந்த ஆலயச் சுவரிலே அரச கோலத்துடன் ஓர் உருவம் தலைப்பாகை, உடை வாள் முதலிய வற்றோடும் பத்தினியுடன் நிற்கிறது இதனைச் சேக்கிழார்சுவாமிகள் பத்தினியாருடன் நிற்கும் மந்திரிக் கோலம் என்று சிலர் கருதுவதாய் எனது நண்பர் பண்டிதர் திரு. கா. ர. நமசிவாய முதலியார் அவர்கள் சொல்லித்தெரிந்தேன். ஆனால் அதைப்பற்றி விசாரித்ததில் அது அச்சுக் கோயிலுக்குச் சில மானியங்கள் செய்து விளை நிலங்கள் விடுத்த சந்திரகிரி அரசர் கிருஷ்ணராயருடைய உருவம் என்று அவ்வூரார் சொல்கிறார்கள். அந்த ஆலயத்திற்குச் சமீபத்தில் சுற்றிலும் எழுத்துகள் வெட்டப்பட்ட ஒரு கல்ஸ்தம்பம் நிற்கிறது. அதனைப் படித்துப் பார்க்க இயலாதபடி கீழே மண்ணில் சில பாகம் மறைந்து உள்ளது. அது அந்த ஊரார் சொல்லும் செய்தியை உறுதிப்படுத்தக் கூடியதாய்த்தான் தோன்றுகிறது.

(வரும்)

---





# சிறைச்சாலைச் சீர்திருத்தம்

## இந்தியா அரசாங்கத்தார் அறிக்கை

சிறைச் சாலைகளிலுள்ள கைதிகள் நடத்தப் படுவதன் சம்பந்தமாகச் சில திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென்றும் வகுப்பு வேற்றுமைகள் முதலியன காட்டப்படக்கூடா தென்றும் பல நாட்களாக ஒரு கிளர்ச்சி இருந்தது. இது சம்பந்தமாக இந்தியா அரசாங்கத்து ஹோம் அங்கத்தினர், மாகாண அரசாங்கங்களின் பிரதிநிதிகளுடனும், உத்தியோகஸ்தரல்லாத சில தலைவர்களுடனும் கலந்தாலோசித்தது நேயர்களறிந்த விஷயமே. இவை சம்பந்தமாக, இதுகாலை இந்தியா அரசாங்கத்தார் வெளியிட்டிருக்கும் அறிக்கையின் சாரம் வருமாறு :—

### மூவகைக் கைதிகள்

தண்டனை யடைந்த கைதிகள் ஏ. பி. சி. என்ற மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்படுவார்கள். ஏ வகுப்பில் கீழ்க்கண்ட கைதிகள் சேர்த்துக் கொள்ளப்படுவதற்குத் தகுதியுடையவர்களா யிருப்பார்கள் :—(1) சிறை செல்லுதலையே வழக்கமாகக் கொண்டிராத நன்னடத்தை யுள்ளவர்கள். (2) சமூக அந்தஸ்து, கல்வி, வாழ்க்கை இவைகள் காரணமாக உயர்ந்த தன்மையில் வாழ்ந்து வந்தவர்கள். (3) கொடுமை, ஒழுக்கக் குறைவு, சுயநலம் இவை காரணமாகத் தண்டிக்கப் படாதவர்கள்; தீவிர பலாத்காரச் செய்கைகள் அல்லது முன்னேற்பாட்டுடன் செய்யப்பட்ட பலாத்காரச் செயல்கள் இவைகளுக்காகத் தண்டிக்கப்படாதவர்கள்; சொத்துக்கள் மீது இழைக்கப்பட்ட குற்றங்களுக்காகத் தண்டிக்கப்படாதவர்கள்; குற்றஞ் செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடனே, அல்லது குற்றஞ் செய்வதற்குச் சாத்தியமாகும்படியோ, வெடி குண்டுகள், துப்பாக்கிகள், ஆபத்து விளைவிக்கக்கூடிய வேறு ஆயுதங்கள் முதலியன வைத்துக்கொண்டிருந்ததற்காகத் தண்டனையடையாதவர்கள்; மேற்கண்ட குற்றங்கள் நிகழ்வதற்குத் துணையாக இருந்ததற்காகவோ, அவைகளைச் செய்யத் தூண்டியதற்காகவோ தண்டிக்கப் படாதவர்கள்.

வாழ்க்கை அந்தஸ்து, கல்வி, வாழ்க்கைப் பழக்கம் இவைகள் காரணமாக, உயர்ந்த வாழ்க்கையை நடத்தி வந்தவர்கள், பி. வகுப்பில் சேரத்தகுதியுள்ளவர்களாவார்கள். வழக்கமாகக் குற்றஞ்செய்யும் இயல்பினர் இதனின்று விலக்கப் படமாட்டார்கள். கைதிகளைப்பிரிக்கும் அதிகார முடையவர்கள், இவர்களுடைய நடத்தை, முன் வரலாறு இவைகளை அநுசரித்து, இவர்களை பி. வகுப்பில் சேர்க்கும்படி சிபார்சு செய்ய உரிமை அளிக்கப்படுவார்கள். ஆனால், இதனை அங்கீகரிக்கவோ அல்லது மாற்றவோ, மாகாண அரசாங்கத்தாருக்கு அதிகாரமுண்டு.

ஏ. வகுப்பிலும், பி. வகுப்பிலும் சேர்க்கப் படாத கைதிகள் அனைவரும் சி. வகுப்பில் சேர்க்கப் படுவார்கள். கைதிகளைப்பிரிக்கும் அதிகாரம் ஹைகோர்ட் நீதிபதிகள், செஷன்ஸ் நீதிபதிகள், ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டுகள், பிரசிடென்சி மாஜிஸ்ட்ரேட்டுகள் சப்டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட்டுகள், முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட்டுகள் (கடைசியில் கூறப்பட்ட இரண்டு விதமான அதிகாரிகள் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் மூலம்) ஆகிய இவர்களுக்கு உண்டு. இவர்கள், தங்களால் விசாரிக்கப்பட்ட வழக்குகளிலும், பிற வழக்குகளிலும் தண்டனை யடைந்தவர்களை மேற்கூறப்பட்ட வகுப்புவாரி பிரிப்பார்கள். குறிப்பிட்ட ஒரு கைதியை ஏ வகுப்பில் சேர்க்க வேண்டுமா அல்லது பி வகுப்பில் சேர்க்க வேண்டுமா வென்பதைப் பற்றிய சிபார்சை முதன் முதலில் ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டே மாகாண அரசாங்கத்திற்குச் செய்யவேண்டும்; மாகாண அரசாங்கத்தார் அந்தச் சிபார்சை அங்கீகரிப்பர்; அல்லது பரிசிலனை செய்வர்.

### கைதிகளின் உரிமைகள்

ஏ வகுப்புக் கைதிகள்,அந்த வகுப்புக்குரிய எல்லா உரிமைகளையும் பெறத் தகுதியுடையவர்கள். சமூகத்தின் காரணமாக, எந்த வகுப்புக்கைதிகளும் விசேஷ உரிமைபெறத் தகுதி யுடையவர்களன்று. தற்போழ்து, விசேஷ வகுப்புக் கைதிகளுக்குக் கொடுக்கப் படும் எல்லா உரிமைகளும் இனி ஏ வகுப்புக் கைதிகளுக்குக் கொடுக்கப்படும். அதாவது, தனியான இருப்பிடம், அவசியமான மேஜை, நாற்காலி முதலிய சாமான்கள், பிறருடன் கலந்து வாழ்வதற்கும், தேகப் பயிற்சிக்கும் வேண்டிய நியாயமான வசதிகள், சுகாதாரமுள்ள ஸ்நான வசதிகள் முதலியன கொடுக்கப்படும்.

சி.வகுப்புக்கைதிகளுக்குக் கொடுக்கப்படும் உணவைக்காட்டிலும் சிறந்ததான உணவு ஏ. பி. வகுப்புக் கைதிகளுக்கு அளிக்கப் படும். ஒரு கைதியின் சராசரிச் சாப்பாட்டுச் செலவு இவ்வளவென்று நிர்ணயிக்கப்படும். இந்தத் தொகைக்குள் உணவு வகைகள் வேண்டுமானால் மாறலாம். ஏ. பி. வகுப்புக் கைதிகளின் சாப்பாட்டுச்செலவை அரசாங்கத்தாரே ஏற்றுக்கொள்வர். இப்பொழுது விசேஷ வகுப்புக்கைதிகளே சிறைச்சாலையில் கிடைக்கும் உணவைத் தவிர தங்களுடைய சொந்தச்செலவில் சாப்பாடு வரவழைத்துக்கொள்ள உரிமை பெற்றிருக்கிறார்கள். இந்த உரிமை ஏ. வகுப்புக் கைதிகளுக்குமட்டும் இனி கொடுக்கப்படும்.

விசேஷ வகுப்புக்கைதிகள், தங்களுடைய சொந்த ஆடைகளை அணிந்து கொள்ளலாம் என்று இப்பொழுது அளிக்கப்பட்டிருக்கும் உரிமை நீடித்து அமுலில் இருந்துவரும். ஏ. வகுப்புக்கைதிகள் அரசாங்கச் செலவிலேயே தங்களுக்கு உடைகள் வேண்டுமென்று விரும்பினால், பி. வகுப்புக் கைதிகளுக்குக் கொடுக்கப்படும் உடைகள் அவர்களுக்குக் கொடுக்கப்படும். பி. வகுப்புக் கைதிகள் சிறைச்சாலை உடையையே அணிந்து கொள்வார்கள். ஆனால் சி. வகுப்புக் கைதிகள் அணியும் உடைகளைவிட மாறுபட்டதாயும் சிறந்ததாயும் இருக்கும்.

ஏ. பி. வகுப்புக் கைதிகளுக்கென்று தனியாக ஒரு சிறைச்சாலை ஒவ்வொரு மாகாணத்திலும் இருத்தல் விரும்பத்தக்கதாகும். ஆனால் இஃது அந்தந்த மாகாண அரசாங்கத்தின் வரவு செலவு நிலையைப் பொறுத்த விஷயமாகும். ஆனால், தனியான சிறைச்சாலைகள் ஏ. பி. வகுப்புக் கைதிகளுக்கு இருக்க வேண்டுமென்பதையே மாகாண அரசாங்கங்கள், தங்கள் இலட்சியமாகக் கொள்ள வேண்டும். அதற்கிடையே, மாகாண அரசாங்கங்கள், தங்கள் கீழுள்ள சிறைச்சாலை வசதிகளைப் பரிசீலனை செய்து மேற்படி இலட்சியத்தை யடைய, தங்களால் முடிந்த வரை ஏற்பாடுகளைச் செய்யுமென்று இந்தியா அரசாங்கத்தார் நம்புகின்றனர்.

ஏ. பி. வகுப்புக் கைதிகளுக்குத் தனியான சிறைச்சாலை இருக்க வேண்டுமென்பதோடு கூட, இவர்களைக் கவனிப்பதற்கென்று தனியான சிப்பந்திகளும் இருக்க வேண்டுமென்று இந்தியா அரசாங்கத்தார் விரும்புகின்றனர். இவ்விஷயத்தைப்பற்றியும் மாகாண அரசாங்கத்தினர் விரைவில் கவனிப்பர் என்று நம்பப்படுகிறது. ஏ. பி. வகுப்புக் கைதிகளுக்குக் கொடுக்கப்படும் வேலைகள், வைத்தியர்களுடைய ஆலோசனையின் பேரில், கைதிகளின் திறமை,நடத்தை, சிறைப்பிரவேச மாவதற்குமுன் நடத்திவந்த வாழ்க்கை அவர்களின் பூர்வீக வரலாறு முதலியவைகளை அநுசரித்தவாய் இருக்க வேண்டுமென்பதை இந்தியா அரசாங்கத்தார் வற்புறுத்த விரும்புகின்றனர்.

கல்விபயின்ற கைதிகளின் அறிவு சம்பந்தமான தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்வதற்கான வசதிகள், தகுந்த பாதுகாப்புடன் அளிக்கப்பட வேண்டுமென்ற தத்துவத்தை இந்தியா அரசாங்கத்தார் அங்கீகரித்துக் கொள்கின்றனர். சிறைச்சாலைகளில் தற்போதிருக்கும் புத்தகசாலைகளின் நிலைமையைக் குறித்துப் பரிசிலனை செய்யவும், புத்தகசாலைகள் இல்லாவிடத்து அவைகளை ஏற்படுத்தவும், குறைபாடுகளுடன் கூடிய புத்தக சாலைகளைச் சீர்திருத்தவும் மாகாண அரசாங்கத்தார் கேட்டுக் கொள்ளப் படுகின்றனர். படித்த கைதிகள், சிறைச்சாலைத் தலைவரின் அங்கீகாரம் பெற்று, வெளியிலிருந்து புத்தகங்களையோ பத்திரிகைகளையோ வரவழைத்துப் படிக்க இடங்கொடுக்கப் படலாம்.

இப்பொழுது விசேஷ வகுப்புக் கைதிகளுக்கு எந்த நிபந்தனைகளுடன் பத்திரிகைகள் அனுமதிக்கப் படுகின்றனவோ அதே நிபந்தனைகளுடன் ஏ. வகுப்புக் கைதிகளுக்கு அனுமதிக்கப்படும். அதாவது விசேஷ சந்தர்ப்பங்களில், மாகாண அரசாங்கத்தின் அங்கீகாரம் பெற்று அளிக்கப்படும், மாகாண அரசாங்கத்தார் சிறைச்சாலைப் பத்திரிகை யொன்றை வெளியிட்டால், அல்லது வெளியிட உத்தேசித்திருந்தால், படித்த கைதிகளுக்கு, இது வாரமொருமுறை அளிக்கப்படும். சிறைச்சாலைப் பத்திரிகை வெளியிட முடியாத மாகாண அரசாங்கத்தினர், தங்கள்செலவில், வாரப்பத்திரிகை யொன்றின் பிரதிகள் சிலவற்றை வரவழைத்து ஏ. பி. வகுப்புக் கைதிகளுக்கு அளிக்கவேண்டும்.

ஏ. வகுப்புக்கைதிகள், பதினைந்து நாட்களுக்கொரு முறை கடிதம் எழுதவோ, பெறவோ உரிமையுடையவர். அப்படியே பதினைந்து நாட்களுக் கொருமுறை தமது உறவினரைக்கண்டு பேச உரிமைபெறுவர். பி. வகுப்புக்கைதிகள் மாதத்திற்கொரு முறை கடிதம் எழுதவும், பெறவும், கண்டு பேசவும் உரிமையுடையவராவர். சம்பாஷணையின் போது நடைபெற்ற விவரங்களோ, அல்லது கைதிகளிடத்திலின்று கிடைக்கும் கடிதங்களின் சாரமோ வெளியிடப்பட்டால், மேற்படி உரிமைகள் ரத்து செய்யப்படும்; அல்லது குறைக்கப்படும்.

### விசாரணைக் கைதிகள்

வாழ்க்கை அந்தஸ்து, கல்வி, வாழ்க்கைப் பழக்கம் இவைகளை உத்தேசித்து,விசாரணையிலிருக்கும் கைதிகள் நடத்தப்பட வேண்டுமென்ற கொள்கையை இந்தியா அரசாங்கத்தார் அங்கீகரிக்கின்றனர். ஆதலின் இனி விசாரணைக் கைதிகள் இரண்டு வகையாகப் பிரிக்கப்படுவார்கள். விசாரணைக் கைதிகளுடைய முன் வாழ்க்கையை அநுசரித்தே இந்தப்பிரிவினை இருக்கும். ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டின் அங்கீகாரத்தைப் பெற்று, விசாரணை செய்யும் மாஜிஸ்ட்ரேட் இந்தப் பிரிவினையைச் செய்வார். முதல் வகை விசாரணைக் கைதிகளுக்கு, தண்டனையடைந்த ஏ. பி. வகுப்புக் கைதிகளுக்கு அளிக்கப்படும் உணவு அளிக்கப்படும். இரண்டாவது வகை விசாரணைக் கைதிகளுக்கு, சி வகுப்புக் கைதிகளின் உணவு அளிக்கப்படும். இருவகை விசாரணைக் கைதிகளும், சிறைக்கூட அதிகாரி மூலமாகச் சொந்த சாப்பாடு வரவழைத்துக் கொள்ளலாம். விசாரணைக் கைதிகள், போதிய உடையுடன் கூடியவர்களாயில்லாதிருந்தால், அல்லது வெளியிலிருந்து வரவழைத்துக் கொள்ளச் சக்தியற்றவர்களாயிருந்தால், அவர்களுக்கு, அரசாங்கச் செலவில் ஆடைகள் அளிக்கப்பட வேண்டுமென்றும், அங்கிகளும் அளிக்கப்படும். ஆடைகள் சிறைச்சாலை ஆடையாக இருக்கக் கூடாதென்றும் இந்தியா அரசாங்கத்தாருக்கு யோசனை கூறப்பட்டிருக்கிறது. இந்த யோசனை அநுசரிக்கப்பட வேண்டுமென்று மாகாண அரசாங்கத்தாருக்கு இந்தியா அரசாங்கத்தார் கூறுகின்றனர்.

மாகாண அரசாங்கத்தார் தற்போதுள்ள விதிகளுக்கு, தாராள நோக்கத்துடன் வியாக்கியானஞ் செய்ய வேண்டுமென்றும் இப்போதைக் காட்டிலும். நல்ல இடவசதிகளைக் கைதிகளுக்களிக்க வேண்டுமென்றும் இந்தியா அரசாங்கத்தார் விரும்புகின்றனர். இவற்றைச் செய்து, தற்போது செய்யப் பட்டுள்ள திருத்தங்களையும் அமுலுக்குக் கொண்டு வருவரேல் சிறந்த அபிவிருத்தி ஏற்படுமென்று இந்தியா அரசாங்கத்தார் கருதுகின்றனர்.

## ஸ்ரீ அலர்மேலு மங்கைத் தாயாரம்மாளவர்கள் சுற்றுப்பிரயாண விவரம்

(ஒரு நிருபரிடமிருந்து)

ஸ்ரீமதி அலர்மேலு மங்கைத் தாயாரம்மாள் அவர்கள் சென்னைச் செனட் மண்டபத்தில் கூடிய மாதர் கூட்டத்தில் ஆரம்பக் கல்வி விஷயமாகவும், பாடபுத்தகக் கமிட்டியில் பெண்களும் அங்கத்தினரா யிருக்க வேண்டுமென்பதாகவும் பேசினார்கள். மறுநாள் கூடிய மாதர் சீர்திருத்தக் கூட்டத்தில் சாரதா மசோதாவை யொட்டி விவாகவிஷயத்தில் பெண்களிலும் ஆண்கள் சிறிது வயது மூத்திருக்க வேண்டுமென்று வாதித்தார்கள். பிற்பாடு வாலாஜாபாத், தென்னேரி, ஸ்ரீ பெரும்புதூர், செம்மலி, குன்னத்தூர், பொன்னேரி முதலிய விடங்களிலும் சுற்றிவிட்டு, வடாற்காடு, சித்தூரில் பிரம்ம ஞானசங்கக்கட்டடத்தில் ஸ்ரீ பார்த்தசாரதி ஐயங்கார் பி. ஏ. பி. எல். எம். எல். ஸி. அவர்களின் தலைமையின்கீழ், சாரதா மசோதாவைப்பற்றிப் பிரசங்கித்தார்கள். சித்தூர் தெலுங்குநாடேயெனினும் சிற+ஊர்=சித்தூர் என்பதில் இதுவும் தமிழ் நாடே யென்றும், ஏறக்குறைய 70 வருடங்களுக்கு முன், தெலுங்கு, தமிழ், இந்துஸ்தானி, இங்கிலீஷ் முதலிய பல பாஷைகள் கற்றுணர்ந்த, முத்தமிழ்வித்துவான் காசி விஸ்வநாதமுதலியார் இங்குள்ள கோர்ட்டில் டிரான்ஸிலேட்டரா யிருந்தாரென்றும், அவர் காலத்திலே செய்த சீர்திருத்தவேலைகள் இக்காலத்திலுங் கூடச் செய்வாரில்லையென்றும், அவரியற்றிய புத்தகங்களைப்பற்றியும் 'இந்து' 'சுதேசமித்திரன்' பத்திரிகைகளைநடத்திய, மு. வீரராகவ ஆச்சாரியார் பி.ஏ.அவர்களைப்பற்றியும், ஆனரபில் அனந்தாச்சாரி அவர்களைப்பற்றியும், பானகல் அரசர், திரு. இராமலிங்க செட்டியார் முதலிய தற்காலத்ய பல மதியூகிகள் வாழ்ந்திருந்தவிட மென்பதைப் பற்றியும் முதலில் சிறிது அவை யடக்கமாய்ப் பேசினார்கள். முற்குறித்தபடி பெரியோர்கள் பலர் பாடுபட்டதன் பலனாக, இப்பொழுது சாரதா மசோதா வந்துளதென்றும் இனிமேல் இளம் கைம்பெண்கள் தொகையில் அதிகமாயிரார்கள் என்றும், பெண்களுக்கு இனிமேல் உண்டாகும் கல்வி முதலிய அநேக நன்மைகளைப் பற்றியும் விவரித்தார்கள். அம்மையாரின் பர்த்தா அவர்கள் இப்பிரதேசங்களில் பால்யத்தில் (தெலுங்கு நாட்டில்) வசித்திருந்தமையால் விஷயங்களை முன் உணர்ந்து பேசவும் அம்மையாருக்கும் அநுகூலமாயிருந்தது.

### மதுரை

#### தமிழ்ச் சங்க வருஷோற்சவம்

மதுரை சென்றபோது தமிழ்ச் சங்கத்தில் தமிழ்ப் பாஷையின் மேன்மையைப் பற்றிப் பேசினார்கள். பிரசங்க முடிவிலே ஆங்கிலேயருக்கிருக்கும் தமிழ்ப் பாஷாபிமானங்கூட நமக்கில்லையே என்று எடுத்துக் காட்டினார்கள். பிஷப் கால்டுவெல், ஜி. யு. போப், ராட்லாக், வின்சிலோ முதலியவர்களையும், ப்ரவுன் முதலிய தெலுங்கு பண்டிதர்களையும் விவரித்தார்கள். இம்மட்டோ வங்காளிகள், மஹாராஷ்டிரர்கள், ஆந்திரர்களைப் போல், சாஸ்திர மொழிபெயர்ப்பு வேலைகள் தமிழிலும் செய்யவேண்டு மென்றார்கள். ஆங்கிலேயத்தை எதிர் பார்க்கப்படாதென்றும் வற்புறுத்திப் பேசினார்கள். மீண்டும் வழக்கப்படி தமது சகாதாரப் பிரசாரத்தின் பொருட்டு, ஊத்துக்காடு, திருவள்ளூர், ஈக்காடு, கடம்பத்தூர், எருக்கஞ்சேரி, பொழில்கிராமம், அழிஞ்சிவாக்கம், கொரட்டூர், வடப்பெருப்பாக்கம், கோட்டூர் முதலிய விடங்களிலே சுகவழி சொற்பெருக் கிட்டுவிட்டு நாகர் கோயிலுக்குத் தமது பர்த்தாவோடு பிரயாணமானார்கள்.

நாகர்கோயிலைத் தென்திருவாங்கூர் என்னலாம். சில நூற்றாண்டுகளுக்கு முன் இத்தேசமெல்லாம் இராணி மங்கம்மாளுக்குக் கப்பம் கட்டிக்கொண்டிருந்தவிடங்களே. மைசூர் சமஸ்தானமும் அப்படியே. தென் திருவாங்கூர் இப்பொழுதும் அப்பொழுதும் எப்பொழுதும் தமிழ்த் தேசமேயன்றி வேறில்லை. இங்கு பிராமணரல்லாதார் சீர்திருத்த மகாநாடு ஒன்று கூடிற்று.

இப்பெருங் கூட்டத்திலே மூன்று முறை ஸ்ரீ அலர்மேலுமங்கைத் தாயாரம்மாள் அவர்கள் பேசினார்கள்.

### நாங்குனேரி

இது ஒரு பெரிய தென்கலை வைஷ்ணவ ஸ்தலம். கோயில் மிக அழகாய் அமைந்திருக்கிறது. திரிசிரபுரம் விஜயரங்க சொக்கலிங்க நாயுடு அரசர் காலத்தில் அமைந்ததாய்ச் சில விஷயங்கள் காணப் படுகின்றன. கோயிலை அடுத்த பெரிய ஏரி நீர் நிறைந்து கடல் போலக் காணப்படுகின்றது. ஏரிக்கரை பலமாய்க் கட்டப்பட்டிருப்பினும் கோயிலுக்குள், சிற்சில பாகங்களில் தண்ணீர் வெளியில் வந்து நிற்கின்றது. தங்கரதமும் வெள்ளி ரதமும் கோயிலுக்கிருக்கின்றனவென்று கூறிக் கோயில் சிப்பந்திகள் அவைகளைக் கண் காட்சிபோல் காட்டுகிறார்கள். ஸ்ரீ வானமாமலை இராமாநுஜ ஜீயர்ஸ்வாமிகள் பழையகாலத்து வழியிலே கோயிலை வைத்திருப்பதைப் பார்க்கிலும் காலாநுகாலமாய் முன்னேற்றத்தில் மாற்ற வேண்டும். பாதிரிமார்கள் கல்வி வைத்தொழில் கற்பித்துப் பொது வைத்திற்குழைப்பது போல ஏன் இவர்களும் உழைக்கப்படாது? வைணவம் ஜாதிபேதமின்றிச் சீர்திருத்த வந்த மதம். அதிலும் தென்கலை வைஷ்ணவம் சீர்திருத்தத்தில் சிரேஷ்டமானது. வைஷ்ணவம் சரியாய் வேலை செய்திருக்குமாயின் அல்லது செய்யுமாயின் பிற மதத்திற்குப் போனவர்களும் திரும்பி விடுவார்கள். ஜீயர் ஸ்வாமிகள் வடநாட்டில் பல விடங்களிற் சுற்றியும் பலரை சிஷ்யராக்கியும் தற்கால விஷயங்களை அறிந்தும் வருகின்றதாய்த் தெரிகிறது. இத்தகைய பெரியார் இகபர சம்பந்தமான எத்தனையோ வேலைகளை நன்கு செய்யலாம். பின்னர் திரு. நம்பியா பிள்ளை அவர்களின் மாக்கடையில் கூடிய பெருங் கூட்டத்தில், திருமதி அம்மையார் தலைமை வகித்து 2 மணிநேரம் பேசினார்கள். பிறகு கன்னியாகுமரிக்குப் பிரயாண மானார்கள்.

### கன்னியாகுமரி முனை

இப்பிரதேசம் நிலபாகத்தி னின்று நீழிர நீங்கி அழகாய் முக்கோண வடிவத்திலே நன்கு காணப்படுகின்றது. இக்கடலின மணல் நுண்ணியதாய் மாவுபோல் இல்லை. அரிசியைப் போலும் நெல், கோதுமை, மணி முதலிய தானியங்கள் போலும் காணப்படுகின்றது. மணலிலே பலவிதம்: வெண்மணல் கருமணல், செம்மணல் இப்படியும் உள்ளன. பச்சை சிவப்பு ஊதா முதலிய நிறத்தோற்றமும் தென்படுகின்றது. அம்மன் கோயில் கடலோரத்தில் மிக அழகாய் அமைந்திருக்கின்றது. உயர்ந்த கோபுரமில்லை. இருப்பின் பின்னும் வெகு அழகாயிருக்கும். பெரிய மதில் சூழ்ந்திருப்பது அழகெனினும் ஜெயில் போலக் காணப்படுகின்றது. முகவாயிலில் அதற்கேற்றபடி திருவாங்கூர்ச் சமஸ்தான சம்பந்தமான சிப்பாய், துப்பாக்கியைத் தோளில் தாங்கிக் காவல் காக்கிறான். விலக்கப்பட்ட சில வகுப்பார்கள் கோயிலுக்குள்ளே போகப் பயப்படுகின்றார்கள். காவலாளன் மேலாடையின்றிப் பயபக்தியோடு போகச் செய்கிறான். கோயிலுக்குள் சித்திர வேலைப்பாடுகள் அதிகம் ஒன்றுமில்லை. இப்பொழுது கோயிலுக்குள், சித்திரசட்டட சீர்திருத்த வேலைகள் சிறிது நடக்கின்றன. தெற்கு, மேற்கு எங்கும் கடலாய் நீர் சூழ்ந்திருப்பது குமரிமுனையின் அழகிய தோற்றம் என்னலாம்.

"கன்னியா குமரிமுனை" என்றபடி முனை முனையாகவே இப்போதும் இருக்கின்றது. கடல் மத்தியில் சில விடங்களில் குன்றுகள் தோன்றுகின்றன. வடபாகமெல்லாம் மேட்டுப்பாங்காய் நல்ல ரஸ்தாவும் திருவாங்கூர் சமஸ்தானத்தில் கட்டப்பட்ட பல கட்டடங்களும் ராஜ கிரஹமும் யாத்ராவாசிகள் இறங்குவதற்கு வேண்டிய வசதிகளும் காணப்படுகின்றன. கடல் தெற்கு முகமாய் இருப்பதால் சூரியன், கண் எதிரில்படாமல் மறைவிலிருந்து, சாந்தமாய் நம்மை வரவேற்கின்றான். சாயுமான பெண்களும் சோப்பாக்களுங்கூட வேண்டியதில்லை. இயற்கை அமைப்பே ஆனந்தம். சுற்றிப் பார்த்தபின்பு மனோரம்மியமாய் சில மணி நேரம் கடலருகில் இருந்து ஆனந்திக்கலாம்.

(தொடரும்)

